பூஜித்து வந்தனர். 2002–இல் இரண்டாவது கும்பாபிஷேகமும் நடைபெற்றது. இன்று வரை அத் தேவிக்குப் பூஜைகள் உரிய சிறப்பான முறையில் நடந்து கொண்டிருக்கின்றன.

## ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள்

ஸ்ரீ S.வேங்கடஸ்வாமி ஐயர், ஸ்ரீமதி தர்மாம்பாள் தம்பதியினருக்கு இரண்டாம் மகனாகச் சென்னையில் 03.02.1937–இல் பிறந்து ஸேதுராமன் என்னும் சிறுவன் வளர்ந்து வந்தான்; ஸ்ரீ வள்ளிமலை ஸ்வாமிகள் தலைமை தாங்கிப் பழநியில் 1944 –இல் நடத்திய முதல் திருப்புகழ் மாநாட்டுக்கு அண்ணன், மாமன்மாருடன் சென்றான்; அங்கு ஸேதுராமனுக்கு ஸ்வாமிகளின் அருளாசி கிடைத்தது. 'உம்பர்தரு', 'மதியால் வித்தகனாகி' ஆகிய இரு திருப்புகழ்ப் பாடல்களையும் உபதேசமாகப் பெற்றான். ஸேதுராமன் பள்ளி இறுதி வகுப்பில் (SSLC) படித்து வந்த சமயம் 20.01.1952 –இல் திருப்போரூரில் முருகனுடைய திருவருள் கூடியது. 'திருமுருகன் ஹர ஹரோ ஹராக் கும்மி ' என்னும் கும்மிப் பாட்டு எழுதப்பெற்ற காகிதத்தைக் கிழவர் ஒருவர் ஸேதுராமனிடம் தந்து மறைந்தது முதல் புதிய புதிய பாடல்களை ஆசு கவிகளாகப் பாடும் திறமையைப் பெற்று அருட்கவி ஸேதுராமன் எனப் போற்றப் பெற்றான்; ஆசு கவிகளாக அருட்கவிகளைப் பாடிக்கொண்டிருந்தான்.

வள்ளிமலை ஸ்வாமிகளிடம் உபதேசம் பெற்றவன் என்ற காரணத்தால் அன்பு கூர்ந்து தான் நடத்திவந்த ப்ருத்வி இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில் ஸேதுராமனுக்கு வேலை கொடுத்து வைஷ்ணவி தேவியை வாரம் தோறும் தரிசிக்கும் வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுத்திருந்தார் ஸாது அண்வாநந்தா. இப்படி வடதிருமுல்லை வாயிலுக்குச் சென்றபொழுதெல்லாம் ஸேதுராமன் பல பல பாடல்களைத் தேவிக்கு அர்ப்பணம் செய்தான். கண்களை மூடிக்கொண்டு கையில் தாளத்துடன் தேவி ஸந்நிதியில் நின்றால் ராக தாளங்களுடன் பாடல்கள் ஸேதுராமன் வாய்மூலம் வெளிவரும். அவற்றை உடனிருந்தோர் எழுதிக்கொள்ள வேண்டும். இதுபோல் சென்னை நகரம் மற்றும் வெளியூர்க் கோயில்களிலும் நடந்து வந்தன. அந்தப் பாடல்கள் 'அருட்புகழ்' என்றழைக்கப் பெற்றன.

ஸ்வாமி அண்வாநந்தா (ஸாது பார்த்த ஸாரதி) அவர்கள், கீலக ஆண்டு மாசி மாதம் 2–ஆம் தேதி சிவராத்திரி 15/02/1969 அன்று, ஸேதுராமனின் தாயார், பெரிய தாயார் இருவருக்கும் தேவியின் பாதங்களில் வைத்த காவி உடைகளைக் கொடுத்து அணியச் செய்து அவர்களைத் துறவிகள் ஆக்கினார். தாயாரும். பெரிய தாயாரும் முறையே தவத்திருமதிகளாக மோநம்மாள், க்ஞாநம்மாள் என்ற தீக்ஷா நாமங்களைப் பெற்றனர். பிறகு, துறவியான தாயார், ஸாது அண்வாநந்தா அவர்கள் தேவியின் பாதங்களில் வைத்துத் தந்த காவி உடையைத் தன் மகனுக்கு அளிக்க, அவற்றைப் பெற்று அணிந்து கொண்டு ஸேதுராமன் துறவி ஆனார்; ஸாதுராம் ஸ்வாமிகள் என்ற தீக்ஷா நாமம் தரப்பெற்றார். ஸாதுராம் ஸ்வாமிகள் துறவியாக இருந்து திருப்புகழ் பாடிப் பரப்பியும் ஆன்மிகச் சொற்பொழிவுகள் செய்தும், பல கோயில் ஸந்நிதிகளில் அருட்புகழ் பாடியும் வந்தார். வைஷ்ணவி தேவிக்கு மட்டும் ஏறக்குறைய ஆயிரம் பாடல்கள் உள்ளன. எல்லாத் தெய்வங்களையும், முற்காலத்

தற்காலச் சான்றோர் பெருமக்களையும் சேர்த்து, ஏறக்குறைய பத்தாயிரம் அருட்புகழ் பாடல்களைப் பாடியுள்ளார்கள். இவற்றில் தமிழிலக்கியத்தில் உள்ள பல விதமான யாப்பமைப்புகளில் பாடல்கள் வந்துள்ளன. இங்ஙனம் ஸ்வாமிகள் 63 ஆண்டுகள் வாழ்ந்து, பிரமாதி வருஷம் மாசி மாதம் 27–ஆம் தேதி சுக்ல பக்ஷ பஞ்சமி திதியில், பரணி நாள், வெள்ளிக் கிழமையில் (10–03–2000), முருகன் திருவடியில் ஸித்தி அடைந்தார்கள். அவருடைய மஹாஸமாதி, நங்கைநல்லூரில் உள்ள பொங்கி மடாலயத்தில், தாயார் (மோநம்மாள்), பெரிய தாயார் (க்ஞாநம்மாள்) ஸமாதிகளுக்கு மேற்கில் அமைந்துள்ளது. ஸமாதியின் மேல் ஸச்சிதாநந்த தண்டபாணியின் உருவம் திகழ்ந்து வருகின்றது.

## ஸ்ரீ வைஷ்ணவி பிள்ளைத் தமிழ்

வடதிரு முல்லை வாயில் வைஷ்ணவி மேல் வழக்கமான தலைப்புக்களில் ஏறக்குறைய ஆயிரம் பாடல்களைப் பாடியுள்ளார் ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள். அவற்றுள் ஒரு பகுதி (17 தலைப்புகள்) வைஷ்ணவி ஆலய ஸன்மார்க்க ஸங்கத்தார் வெளியிட்ட வைஷ்ணவி சந்நிதி முறை தொகுதி 2–இல் 1959 ஆம் ஆண்டு மற்றவர்கள் பாடல்களுடன் அச்சிடப்பட்டுள்ளது. இன்னமும் பல தலைப்புகளில் பல பாடல்கள் அச்சாக உள்ளன. ஸ்ரீ ஸ்வாமிகள் ஸந்யாஸம் பெற்ற பிறகு, 1970–ல் சாதுர் மாஸ்ய வ்ரத காலத்தில், ரிஷிகேசத்தில் அருள் நிலையில் அமர்ந்து எழுதிய 102 பாடல்கள் கொண்ட "வைஷ்ணவி பிள்ளைத் தமிழ்", இப்பொழுது குறிப்புரையுடன் அச்சிடப்பட்டுள்ளது. முன்னமேயே ஸ்வாமிகள் எழுதிய 12 பாடல்கள் கொண்ட பிள்ளைத்தமிழும் இப் புத்தகத்தில் குறிப்புரையுடன் சேர்க்கப்பட்டுள்ளது.

தமிழிலக்கிய உலகில் எழுந்துள்ள/ தெரிந்துள்ள பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களின் பட்டியல் ஒன்றை இந் நூலில் காணலாம். எந்தெந்தத் தெய்வங்களையும் எந்தெந்தப் பெரியோர்களையும் ஸ்வாமிகள் பாடியுள்ளார் என்பதும் தனியே இந் நூலில் தரப்பெற்றுள்ளது.

இந் நூலின் இரண்டாம் பதிப்பு ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளையினரால் 2015 ஆம் ஆண்டின் அருட்புகழ் வெளியீடாக அவரது 15–ஆம் ஆராதநை நாளில் (23.02.2015) வெளியிடப்படுகின்றது. இதனைச் சிறப்புற அச்சிட்டுக் கொடுத்துள்ள "விஷுவல் கிராபிக்ஸ்" ஸ்ரீ RM. அப்பாசாமி அவர்கட்கு எங்கள் நன்றி. இப் பிள்ளைத் தமிழ்ப் பாடல்களின் முதல் எழுத்துக்கள் மந்த்ராக்ஷரங்களாக அமைந்த சிறப்பு அம்சம் பற்றிய குறிப்பு உள்ளே தனியாகத் தரப்பெற்றுள்ளது. வைஷ்ணவி தேவியின் பக்தர்களும், தமிழ் அறிஞர்களும், ஆன்மிகப் பசியினரும் இந்த அரிய பொக்கிஷமான பாடல்களைப் படித்துப் பெரும்பேறு பெற அருளுமாறு ஜகன்மாதா ஆத்ய பராசக்தி ஸ்ரீ வைஷ்ணவி தேவியின் தாமரைத் திருவடிகளைச் சிந்தையில் வைத்துப் போற்றுகின்றேன்.

இங்ஙனம்

**ஸு. வே. ஸுப்ரம்மண்யன்**
மேனேஜிங் டிரஸ்ட்டி,
பொங்கி மோநாம்பிகை டிரஸ்ட்.

நங்கைநல்லூர்,
சென்னை – 600 061.

12.02.2015.

# ஸ்ரீ வைஷ்ணவி பிள்ளைத் தமிழின் முதற் குறிப்பு அகராதி

(அகர வரிசை) (எண்கள்–பாடல் எண்கள்)



(பாடல் முதற்குறிப் பகராதி முற்றும்)

# ஸ்ரீ வைஷ்ணவி பிள்ளைத் தமிழின் பாட்டு முதற் குறிப்பு

(பாடப் பெற்றுள்ள வரிசையில்)

காப்பு **ஓம்** பொருள்

**1. காப்பு**

1. **ஶி**வகாம
2. **வா**யார
3. **ய**துகுலம்
4. **ந**ங்கள்குலம்
5. **ம**ந்திரஸொரூ
6. **ந**ல்லசான்றோர்
7. **ம**ச்சப்பெரும்
8. **ஶி**கிபிஞ்சம்
9. **வா**ழ்வுதறி
10. **ய**வளால்

**2. செங்கீரை**

11. **கு**ங்குமஞ்
12. **மா**தாபிதா
13. **ரா**ஜராஜாச்
14. **ய**க்ஷர்கிந்நரர்
15. **ந**வலோக
16. **ம**தநஸதி
17. **ஶ**மதமமொ
18. **நீ**பார்த்தென
19. **ஶா**மாராகம்
20. **ய**மநியமாதி

**3. தால்**

21. **ந**க்கனை
22. **ம**கவாய்
23. **ஓ**மத்தீ
24. **ந**ண்ணார்புர
25. **மோ**ட்டாலிலை
26. **நா**ராயணாய
27. ராமாயண
28. **ய**மளார்ஜுந
29. **ணா**வென்
30. **ய**ந்த்ரம்தெரி

**4. ஸப்பாணி**

31. **ஓம்**ப்ரணவ
32. **ந**ள்ளிரவு
33. **மோ**லியில்
34. பகவதி
35. **க**ங்காதரன்
36. **வ**ச்சிரப்படை
37. **தே**டுமறை
38. **வா**ரிதிநடுங்க
39. **ஸு**வணமா
40. **தே**வாதி

**5. முத்தம்**

41. **வா**ளரவு
42. **ய**ஜமாநி
43. **ரா**ஜாத்தி
44. **ம**லைவேந்தன்
45. **ரா**கேந்து
46. **ம**திமுத்தம்
47. **ஐம்**பத்து
48. **க்லீங்**கார
49. **ஸௌ**க்கிய
50. **ஸௌ**ந்தரிய

**6. வருகை**

51. **க்லீம்**பத
52. **ஐம்**பூதமே
53. **ஹ்ரீம்**எனும்
54. **க்லீம்**ஜெப
55. **சா**ருஹாஸை
56. **முண்**ணோர்
57. **டா**கிநி
58. **யை**நமோ
59. **வி**ச்சாதரர்
60. **சே**தநச்சரா

**7. அம்புலி**

61. **ம**ருவுந்திரு
62. **ந**ண்ணும்
63. **மே**னாட்டவர்
64. **அ**த்திரிஜன்
65. **தை**யலிவள்
66. **அ**ல்லாளி
67. **றி**க்குமுனர்
68. **நி**ன்னையே
69. **த**ண்ணங்குவளை
70. **மே**னிதனிற்

**8. அம்மானை**

71. **ஓம்**புமொரு
72. **ஐம்**பதுடன்
73. **ஹ்ரீம்**பதவிளக்
74. **ஸ்ரீம்**பெயர்
75. **ஸ்ரீ**சக்ர
76. **ம**த்தாக
77. **ரா**ணிநீ
78. **ஐ**ம்பையு
79. **ரா**கம்பயிரவி
80. **ஜேஸ்**வேதா

**9. நீராடல்**

81. **வர்**ணபஞ்சக்
82. **யை**யென்று
83. **ந**தியுட்சிறந்த
84. **ம**கரமீன்
85. **க**டலேழும்
86. ஏழ்புவியில்
87. **ஈ**காரமாம்
88. **ல**ட்சுமி
89. **ஹ்ரீம்**பர
90. **ஹரி**த்ரா

**10. பொன்ஊசல்**

91. **ஸ**ரஸ்வதி
92. **க**மலமல்லிகை
93. **ஹரி**யொரு
94. **லட்சோ**ப
95. **ஹ்ரீம்**பாடி
96. **ஸ**ச்சிதாநந்த
97. **க**ட்டிப்பொ
98. **ல**குவான
99. **ஹ்ரீம்** பீஜ
100. **ஸ்ரீம்**வசந

**நூற்பயன்**

படர்வள்ளி

# இந்நூலிற் காணப் பெறும் மந்த்ராக்ஷரங்கள்

இந் நூலில் காப்புச் செய்யுள் ஒன்றும், பிள்ளைத் தமிழ்ப் பருவம் ஒன்றுக்குப் பத்துப் பாடல்கள் வீதம் பத்துப் பருவங்கட்கும் மொத்தம் பாடல்கள் 100உம் ஆக, மொத்தம் 101 பாடல்களும் மந்த்ராக்ஷரங்களைக் கொண்டு தொடங்கப் பெறுகின்றன.

1. எல்லா மந்த்ராக்ஷரங்களுக்கும் ஆதியும் அந்தமுமாகிய **'ஓம்'** எனும் (கணபதிக்குரிய) ப்ரணவ அக்ஷரத்தைக் கொண்டு காப்புச் செய்யுள் தொடக்கமாகிறது.

2. காப்புப் பாட்டையும் முதல் ஐந்து பாடல்களையும் சேர்த்துத் தொடக்க எழுத்துக்களைக் கூட்டினால் **'ஓம் ஶிவாய நம'** என்றாகி, ப்ரணவ பஞ்சாக்ஷரமாகிய ஷண்முக ஷடக்ஷரத்தைக் குறிக்கின்றது.

3. 1 முதல் 5 வரை உள்ள பாடல்கள் ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷர மந்த்ரமாகிய **'ஶிவாய நம'** என்னும் 5 எழுத்துக்களைக் கொண்டு தொடக்கமாகின்றன.

4. 6 முதல் 10 வரை உள்ள 5 பாடல்கள் ஸ்தூல பஞ்சாக்ஷரமாகிய **'நம:ஶிவாய'** என்னும் 5 எழுத்துக்களைக் கொண்டு தொடக்கமாகின்றன.

5. 11 முதல் 16 வரை உள்ள 6 பாடல்கள் குமர ஷடக்ஷரம் ஆகிய **'குமாராய நம'** என்னும் 6 எழுத்துக்களைக் கொண்டு தொடக்கமாகின்றன.

6. 17 முதல் 22 வரை உள்ள 6 பாடல்கள் **ஶ்ரீஶ்வர** மந்த்ரமாகிய **'ஶ்ரீஶாய நம'** என்னும் 6 எழுத்துக்களைக் கொண்டு தொடக்கமாகின்றன.

7. 23 முதல் 30 வரை உள்ள 8 பாடல்கள் திருமாலுக்குரிய அஷ்டாக்ஷரம் ஆகிய **'ஓம் நமோ நாராயணாய'** என்னும் 8 எழுத்துக்களைக் கொண்டு தொடக்கமாகின்றன.

8. 31 முதல் 42 வரை உள்ள 12 பாடல்கள் திருமாலின் த்வாதஶாக்ஷரம் ஆகிய **'ஓம் நமோ பகவதே வாஸுதேவாய'** என்னும் 12 அக்ஷரங்களைக் கொண்டு தொடக்கமாகின்றன.

9. 43 முதல் 46 வரை உள்ள 4 பாடல்கள் தாரக மந்த்ரமாகிய **'ராம ராம'** என்னும் 4 எழுத்துக்களால் தொடக்கமாகின்றன.

10. 47 முதல் 52 வரை உள்ள 6 பாடல்களும் தேவி ஷடக்ஷரி ஆகிய **'ஐம்**

**க்லீம் ஸௌ: ஸௌ: க்லீம் ஐம்'** என்னும் ஆறு எழுத்துக்களைக் கொண்டு தொடக்கமாகின்றன. இதுவே ஸ்ரீ பாலா தேவியின் மூல மந்த்ரம் என்பர்.

11. 52 முதல் 60 வரை உள்ள 9 பாடல்களும் சண்டி நவாக்ஷரி மந்த்ரம் ஆகிய **'ஐம் ஹ்ரீம் க்லீம் சாமுண்டாயை விச்சே'** என்னும் 9 அக்ஷரங்களைக் கொண்டு தொடக்கமாகின்றன. 52 ஆவது பாடலின் தொடக்கமாக உள்ள **'ஐம்'** எனும் அக்ஷரம் இடைநிலைத் தீப(க)மாக இருந்து கொண்டு முன்னும் பின்னும் உள்ள இரு மந்த்ரங்களுடனும் முறையே இறுதியிலும் தொடக்கத்திலும் இணைந்து பொலிவது போற்றத்தக்கது.

12. 61 முதல் 70 வரை உள்ள பாடல்களில் அமைந்துள்ள தமிழ் மந்த்ரமாகிய **'மநமே! அதை அறி நிதமே'** என்ற எழுத்துகளின் கோவை **'தத்வமஸி'** மஹாவாக்யத்தின் உட்பொருளை நினைவூட்டுகின்றது. 'அது' என்ற சொல்லால் குறிக்கக் பெறும் ப்ரம்மத்தை ஆத்ம விசாரணை செய்து அறியும்படி மநத்தைத் தூண்டும் தனித் திரு மந்த்ரம் இது.

13. 71 முதல் 84 வரை உள்ள 14 பாடல்களும் ஸ்ரீ ராஜ ராஜேஶ்வரி மந்த்ரம் (சதுர் தஶாக்ஷரி) ஆகிய **'ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஸ்ரீமத் ராஜராஜேஶ்வர்யை நம'** என்னும் 14 எழுத்துக்களைக் கொண்டு தொடக்கமாகின்றன.

14. 85 முதல் 99 வரை உள்ள 15 பாடல்களும் பஞ்ச தஶாக்ஷரி ஆகிய **'கஏஈலஹ்ரீம் ஹஸகஹலஹ்ரீம் ஸகல ஹ்ரீம்'** என்னும் 15 எழுத்துக்களைக் கொண்டு தொடக்கமாகின்றன.

15. மேற்கண்ட 15 உடன் **'ஸ்ரீம்'** என்னும் 100 ஆம் பாட்டின் தொடக்க எழுத்தும் இறுதியில் சேர்ந்தால் மஹா ஷோடஶாக்ஷரி மந்த்ரம் எனவும் ஆகின்றது.

இங்ஙனம் முதல் எழுத்துக்களைக் கூட்டிப் பார்க்கையில் உயரிய 15 மந்த்ரங்கள் அமைந்துள்ளமை தெரியவரும்.

இவ்வாறு பாடல்களின் தொடக்கத்தில் அமைந்துள்ள மந்த்ராக்ஷரங்களைத் தவிரப் பாடல்களின் உள்ளும் பல இடங்களில் அநேக மந்த்ராக்ஷரங்கள் அமைந்து ஒளி வீசிக் கொண்டு திகழ்வதையும் வாசகர்கள் ஆங்காங்குக் கண்டு ஆநந்தம் உறலாம். இதனாலேயே 'நூற்பயன்' பாட்டு, இந் நூலை, யாண்டு(ம்) மா மந்த்ரமயம்' என்றது என்க.

– பதிப்பாளர்.

கணபதி துணை
ஸ்ரீ வைஷ்ணவி துணை

# வட திருமுல்லைவாயில் – அம்பாபுரி
# ஸ்ரீ வைஷ்ணவி பிள்ளைத் தமிழ்

(அருட்கவி–ஸாதுராம் ஸ்வாமிகள் 1970–இல் அருளியது

## காப்பு

### விநாயகர் துதி (கட்டளைக் கலித்துறை)

ஓம்பொரு ளாகி உணர்பவர் நெஞ்சுள் ஒளிர்பவனை
ஆம்பொருள் வேண்டும் அடியவர்க் கீயும் அருட்கடலைத்
தாம்பொருள் என்றழை வைஷ்ணவி பிள்ளைத் தமிழ் தழைக்க
நாம்பொரு ளாக்கண்ணி நண்ணுவம் விக்கிந நாதனையே.

## நூல் I. காப்புப் பருவம்
### (14 சீர் விருத்தம்)

(திருப்புகழ் அமுது, தேவாரப் பால், திருவாசகத் தேன்)

1. ஶி வகாம ஸுந்தரி துரந்தரி நிரந்தரி
திருந்திழை அருந்ததி யினும்
செம்மைசால் கற்பினாள் அற்பினாள் பொற்பினாள்
சிமயத்தி மயவெற்பி னாள்
அவதாந முஞ்செய்ய வல்லகட வூரராம்
அபிராமி பட்டர் உரைசெய்
அந்தாதி யாஞ்செவிலி அன்னைமகிழ் வைஷ்ணவி யென்
அம்பா புரிக்கண் உமையைத்
தவராஜ சிங்கமாம் அருணகிரி நாதர்உரை
சந்தத் திருப்புகழ் களும்
ஸமயகுர வரில்மூவர் சொற்றதே வாரமும்
தமிழ்வாத வூரடிக ளார்
நவமான வகையினிற் றிருவாய் மலர்ந்தருளும்
ஞாநமணி வார்த்தை அவையும்
நாக்கொண்ட இன்சுவை மருந்தொன்று பாலொன்று
நறவொன்ற தாய்க்காக்கவே. (1)

**(பக்த கோடிகள்)**

2. வாயார வாழ்த்திடவும் உடலால் வணங்கிடவு(ம்)
மநமார நெக்குருக வும்
வாய்ப்புற்ற இவ்வரிய மானுடப் பிறவிகைம்
மாறுகரு தாவகையி லே
'நீயார அநுபவி' எனத்தந்து நன்னெறி
நிகழ்த்துமிப் பாரதத் தில்
நீடுதென் னாடதனில் என்னைப் பிறப்பித்த
நிந்மலி தனைக்காக்க வே
பேயார் அரன்கழல் நிழற்கணுற் றிடுபேறு
பெற்றவட வநமு மூர்க்கப்
பெருமான் பிறந்தவேற் காடுபா சூர்தராய்ப்
பிள்ளைபுகழ் வலிதா யமும்
தூயர் அஹங்கொள்ஸுந் தரமூர்த்தி நாயனார்
சொற்றவட முலைவா யிலும்
சூழும்அம் பாபுரியில் வாழும்வைஷ் ணவியெனத்
தொழுபக்த கோடியர்க ளே. (2)

**(அமரர்கள்)**

3. யதுகுலந் தழையவரு சிங்கார கோபால
யாமள நிறக் கண்ணனை
யானையாங் குவலயா பீடத்தை வால்சுற்றி
'யமராஜன் நல்விருந் தா
இதுசெல்க' எனவிட்ட மாயமணி வண்ணனை
இராமனைப் பலதேவ னை
இளையபெரு மாளுக்கு மூத்தபெரு மாளை அணன்
என்னுமுமை யைக்காக்க வே
மதுபொழி மலர்ப்பொழிலில் வரிவண்டு பண்முரல
மாபலா வாழை மூன்றில்
மர்க்கட வருக்கங்கள் முற்சொன விருக்கங்கள்
வாயேறி மூன்றா மதிற்
கதுமென வழுக்கிவிழ அதுகண்டு முல்லைநகை
காட்டவெட் கங்கொண்டு பாய்
கடமல்கு வடமுல்லை வாயில்வைஷ் ணவியைக்
கருத்தினி லிருத்தமர ரே. (3)

**(ஆர்யமும், தமிழும்)**

4. நங்கள்குல தெய்வமாய்ச் சங்கசக் கரசாப
நாந்தக கதாபாணி யாய்
நாற்பத்து முக்கோண நடுவணமர் விந்துகலை
நாதாந்த ஜோதி வடிவாய்
எங்கள்ஸமு ஸாரப் ப்ரவாஹவெள் ளத்தினுக்
கேணியன நீள்தோணி யாய்
எல்லாம் அறிந்தமரும் வில்வவந வைஷ்ணவியை
எஞ்ஞான்றும் இனிது காக்க
அங்கமா றுற்றமறை உபநிஷதம் இதிஹாஸம்
ஆதிசங் கரர்செய் நூல்கள்
அறுமுப் புராணம் கொள் பாகவத மாதிதன்
அஹங்கொள்ஆ ரிய பாஷையும்
ஸங்க நூல் கீழ்மேற் கணக்குநூல் முருகவேள்
சைவர்பன் னிருதிரு முறை
தமிழ்மறைசொல் திவ்யப் ப்ரபந்தாதி உடையஎம்
தாய்மொழி திராவிடமு மே. (4)

**(விபூதி, ருத்ராக்ஷம், (மஞ்சட்) குங்குமம், துளஸிமணி)**

5. மந்திர ஸொரூபத்தி சந்திர ஜடாதரி
மஹாதேவர் மகிழு மனைவி
மண்டலமோ டோர்ஆறு விண்டலமும் ஓர்ஏழு
மாறில்பா தாள உலகும்
இந்திரன் அயன்புவந ஸுந்தரன் முராரி அரன்
எண்டிசையு ளார்தம் உலகும்
எல்லாம் படைத்திரட் சித்தழித் தருள்முல்லை
எழில்வைஷ்ண விக்குழவி யை
ஐந்திரண் டிரவுதொடர் வழிபா டவட்காக்கி
ஆண்டிலோர் இரவே தனக்
கானவழி பாட்டினுக் காக்கொண்ட துறவரசன்
அணிவெண் பொடிப்பூதி யும்
நந்திருத் ராக்ஷமும் இயந்திரத் தர்ச்சனைசெய்
நல்லமஞ் சட்குங் குமம்
நாரணன் துளஸிமணி மாலையும் இரக்ஷையென
நாளுமுழு துங்காக்க வே. (5)

**(வடமொழி நூல்கள் சிலவும், தமிழ்மொழி நூல்கள் சிலவும்)**

6. நல்லசான் றோருடைத் தென்னநவி லப்படு
நறுந்தொண்டை நன்னாட்டினில்
நாவலூ ராளிதமிழ் அருணகிரி நாதர்புகழ்
நமதிரட் டையர்கவிதை நூல்
வல்லதிரு ஆவடு துறைச்சைவ ஆதீந
மாதவச் சிவஞாநி பா
வள்ளலார் திருவருட் பாப்பெற்ற முல்லைவந
வைஷ்ணவியை நன்கு காக்க
சொல்லழகு பொருளழகு யாப்பழகு கோப்பழகு
தொடையழகு நடையழ கெலாம்
தோன்றுதுர்க் காஸப்த ஶதிதேவி மான்மியம்
சொல்தேவி பாகவத நூல்
அல்லல்தவிர் அபிராமி அந்தாதி உலகம்மை
அந்தாதி அருண கிரியார்
அருளுதே வேந்த்ரஸங் கம்பூத வேதாளம்
ஆகிய வகுப்பிவை களே. (6)

**(அந்தணர் அன்பும், முநிவர் தவமும்)**

7. மச்சப் பெருங்கண்ணி பச்சைக் கருங்கன்னி
வாரகல் நெடுங்கண்ணி கூர்
வாட்கண்ணி வேற்கண்ணி கோற்கண்ணி நீற்கண்ணி
மைக்கண்ணி பூக்கண்ணி மான்
அச்சக் கருங்கண்ணி செங்கண்ணி தண்கண்ணி
அனல்பபதி கதிர்முக் கணி
அங்கண்ணி மாவடு வகிர்க்கண்ணி வைஷ்ணவியை
அம்பா புரிப்பு ரக்க
நச்சப் படும்படி நவக்ரஹத் தர்ப்பணமும்
நாடோறு முக்கா லமும்
நன்னீர் இறைத்தலும் காயத்ரி மந்த்ரஜப
நாமஉச் சாரணமும் வான்
மெச்சப் புரிந்துந லொழுக்கத்தில் மேம்பட்டு
வேற்றுயிர்கள் மீதளி கொளும்
வேதியர்தம் உள்ளன்பும் ஆதிமேல் நினைவுற்று
விழைமுநிவர் மெய்த்தவமு மே. (7)

**(மாசிலாமணீஸ்வரர்)**

8. ஶிகிபிஞ்சம் ஆனையின் தந்தம் நவ ரத்திநம்
செம்பவள மென்கொடிகள் பூஞ்
செண்பக நறுங்கொன்றை சந்தந மரக்கிளைகள்
தேன்பலா மாகத லிகள்
அகில்மரத் துண்டங்கள் பல்வகைய முத்தங்கள்
அத்தனையும் வாரிவரு பா
லாற்றின்வட கரையுள்ள திருமுல்லை வைஷ்ணவியென்
அருமதலை யைக்காக்க வே
முகிலுலவு பூஞ்சோலை மாஞ்சோலை தீஞ்சோலை
முற்றுநாற் பாங்கர் புடைசூழ்
முருகுகமழ் தருபுறவில் அம்பா புரிக்கருகில்
முல்லைவந நாத ரென்றும்
மகிழ்வோடு மகிழ்மலர்கள் முகிழ்குழலி கொடியிடைநல்
மங்கைமண வாளர் என்றும்
வளர்கின்ற அகளங்க ரத்ந(ம்)நிர் மலமணியென்
மாசிலா மணியீச ரே. (8)

**(திருமால்)**

9. வாழ்வுதறி வந்தஇரு மாதவர்கள் ஸாதுக்கள்
மாரமண முநிவர் நெறியில்
வள்ளிமலை வள்ளலருள் வழியில்முறை யேஒழுகி
மகிழ்ஸாது பிரமணிய னார்
தாழ்வுதெரி யாப்பரம ஸாதுவாம் ஸ்ரீபார்த்த
ஸாரதியென் நாம முடைய
ஸாமிஅண் வாநந்தர் பூஜைபுரி வைஷ்ணவி
தனைப்பொன்அம் பாபுரியி லே
கேழ்வரகு சாமைதினை கோதுமைநெல் எள்வரகு
கேடில்நவ தானியத் துட்
கிளத்தப் படாதபிற கூலமிவை விளைபுன்செய்
கெழுநன்செய் வயல்கள் புடையிற்
சூழ்வடமு லைப்பதியில் அல்லூர வநநாதர்
ஸுப்ரமணி யக்கடவு ளார்
தோத்திரிக் கக்குடிகொள் கோயிலிற் கோயில் கொள்
துழாய் மார்ப மால்காக்க வே. (9)

**(தற்காப்பு) (அறுசீர் விருத்தம்)**

10. யவளால் தன்னைத் தானாக
இனிதே காக்க இயலுமோ
யவளால் எதுவும் எந்நாளும்
எவணும் காக்கப் படுகிறதோ
யவளை எங்கும் இனிமேலும்
எவரும் புரக்க இயலாதோ
அவளை அவளே புரந்துகொள்க
அம்பா புரத்தவ் வைஷ்ணவியே. (10)

(காப்புப் பருவம் முற்றும்)



# II. செங்கீரைப் பருவம்

**(14 சீர் விருத்தம்)**

11. குங்குமஞ் சாந்தம் ஜவாதுமான் மதம்அகரு
கோரோச னாகர்ப் புரை
கொட்டங் கமழ்ந்தபுழு கிட்டங்கு நறியதக்
கோலமுங் கூட்டிக் குழைத்
தெங்குமஞ் சட்பொடியின் நிறமேற்றி அக்கலவை
யிற்பசுங் கற்பூ ரமும்
இயைவித் துனக்குநறு மணமூட்ட அழகுவாய்ந்
தேய்ந்ததிரு மேனி அங்கத்
தங்குமஞ் சனமாட்டி யானபின் பூசுதற்
காக்கிவைத் துள்ளனம் அதை
அங்கீ கரிப்பதற் கடையாள மாய்முகம்
அசைந்தாட அங்கை யூன்றித்
தெங்குமஞ் சைத்தொடுஞ் செழுமுல்லை வாயிலாய்!
செங்கீரை யாடியருளே
தேவிஅம் பாபுரியில் மேவிவாழ் வைஷ்ணவீ!
செங்கீரை யாடி யருளே! (1)

12. மாதா பிதாமுழுதும் உலகுக் கெலாமான
மாதாய் உனைக்குழவி யாம்

மகளா மதித்துப் புனைந்துரைசெய் முறைமையை
மறுக்காது மறவாது முன்
போதா மதங்கமுநி காத்யாய னத்திருஷி
பொற்பரதர் குலநா யகன்
பொருவிலிம வான்மேநை மருவுகாஞ் சநமாலை
பொதியமலை யத்துவஜ னோ
டோதாதி தக்ஷப் ப்ரஜாபதித் தம்பதியர்
உளமுவக் கக்குழவி யாய்
ஒக்கப் பிறந்துவிளை யாடியதை மீண்டுமின்
றுள்ளத்தில் நினைவு கூர்ந்து
ஶ்ரீதாரு ணாகரப் பாதார விந்தமசை
செங்கீரை யாடி யருளே
திடநல்லை வைஷ்ணவீ! வடமுல்லை வாயிலாய்!
செங்கீரை யாடி யருளே. (2)

13. ராஜரா ஜாச்சிரய புரமென்ற மேற்பாடி
இலகுதவ மிழை நாயகீ!
யாரைக் குறித்துநீ இன்னமுந் தவமிழைக்
கின்றனைகொல்! யாவரு முனை
ராஜரா ஜேஶ்வரி எனக்கருதி வழுவா
திணைத்தா மரைத்தா ளிணை
இந்த்ராதி தேவர்முதல் ஏத்தெடுத் தவைகுறித்
தென்றைக்கு முயல்வர் தவமே
போஜரா ஜன்பழைய காளிதாஸன் போன்ற
புலவர் போற் றியதும் உனையே
புண்டரீ காக்ஷன் வெண் புண்டரீ காஸநன்
புராரிமுத் தேவர்புகழ் நீ
தேஜரா சிப்புனகை மலர்வாய் திறந்துவிடை
செங்கீரை யாடி யருளே
தென்முல்லை வாயில்வட மென்முல்லை வைஷ்ணவீ!
செங்கீரை யாடி யருளே (3)

14. யக்ஷர்கின் னரர்கருடர் கிம்புருடர் கந்தருவர்
ராக்ஷஸர் பிஶாசர் உரகர்
இமையோர் நிஶாசரர் அரக்கர்அவு ணோர்அமரர்
இந்திரர் நிலாச்சந் திரர்

லக்ஷநூற் றுவர்கள்ஈர் அச்சுவிநி தேவர்வஸு
எண்மர்கள் மஹாருத் திரர்
ஏகா தஶத்தவர் துவாதஶா தித்தர்ஸுரர்
எழுமருதர் வித்யா தரர்
நக்ஷத்ர லோகர்ஆ காஶவா ஸிகள்புவந
நாயகர்கள் நவலோகர் கள்
நவநாத ஸித்தர்பதி னெண்ஸித்தர் பாதலர்கள்
நரகர்பூ தலர்மீ தலர்
சிக்ஷணை இரக்ஷணை இலக்ஷணமொ டாற்றுவாய்
செங்கீரை யாடி யருளே
செழுமுல்லை வட வாயில் கெழுசெல்வி வைஷ்ணவீ!
செங்கீரை யாடி யருளே. (4)

15. நவலோக நாயகீ வேதாந்த ஸித்தாந்த
நாதாந்த நடு நாயகீ
ஞாநாந்த போதாந்த யோகாந்த நாயகீ
நவில் கலாந்த விநாயகீ
புவலோக நாயகீ தவலோக நாயகீ
பூலோக புரநா யகீ
புகல்கின்ற மஹலோக ஜநலோக விதிஸத்ய
புரலோக மாநா யகீ
ஸுவலோக நாயகீ பாதலா தலவிதல
ஸுதலமா தலநா யகீ
சொல்தரா தலரஸா தலநாய கீ ஸர்வ
ஸூக்ஷ்மாண்ட கோடி ஆண்ட
சிவலோக நாயகீ பவலோக நாயகீ
செங்கீரை யாடி யருளே
திடர்நீடு நெடுமுல்லை வடவாயில் வைஷ்ணவீ!
செங்கீரை யாடி யருளே. (5)

16. மதநஸதி ரதிநாணும் அழகுவாய்ந் துளஇரு
மலர்த்தாள்கள் பின்னி மிர்த்தி
மதனம்ப றாத்தூணி போன்ம்முழங் கால்களை
மடக்கிநில மீது நாட்டிப்
பதனழிதல் இல்லாத பதமருள்அ பயவரத
பாணியை நிலத்தில் ஊன்றிப்

பச்சைப் பசுங்குழவி! செக்கச் சிவந்தமுக
பங்கயம் நிமிர்ந்து நோக்கி
அதனழகு கலையாத வண்ணந் தவழ்ந்துவந்
தாடியருள் செங்கீரை யே
அடர்கொல்லை இடமுள்ள வடமுல்லை வாயிலாய்!
ஆடியருள் செங்கீரையே
ஸிதநளிநி செம்பதுமை பதம்வருடி மகிழ்மதலை!
செங்கீரை யாடி யருளே
செயிரவிசொல் வயிரவீ! பயிரவீ! வயிணவீ!
செங்கீரை யாடி யருளே. (6)

17. ஶமதமமொ டுபரதி திதீக்ஷைஶ்ரத் தாஸமா
தாநமிவை ஆறுடையர் அந்
தக்கரண மநபுத்தி யோடஹங் காரசித்
தங்களைந் தையுமொ ழித்துத்
தமதுளம் நிறைந்துமிளிர் ஸாதந சதுஷ்ட்டயஞ்
சார்ந்துஜீ வேஶ்வர ஜகம்
தப்பாத இப்பேர்கொள் முப்பாழின் அப்பாற்
றழைந்துஜீ வாத்ம பரமென்
க்ரமமிரண் டுங்கடந் தேகமே வாத்விதிய
கெனமென்ற ஒன்றாயிடக்
கேட்டுருகும் வீட்டுநெறி காட்டியரு ளூட்டிஅவர்
கேட்டினையும் வீட்டி யருள்தாய்!
சிமயவரை யாகும்வட இமயமருள் செல்வமே!
செங்கீரை யாடி யருளே
திருவல்லி தாயம்அரு குறுமுல்லை வைஷ்ணவீ!
செங்கீரை யாடி யருளே. (7

18. நீபார்த் தெனக்கருள கில்லாய் எனிற்பிறிது
நின்றார் எனைக்காப்பர் காண்
நீயே எனக்கன்னை தந்தைகுரு தெய்வமாய்
நிற்கின்ற காரணத் தால்
போபார்த் தெலாங்கொள்ள லாமெனத் தள்ளிப்
புறக்கணித் தாலென் கதி
போகும்வழி தானேது ? புகலுவாய் தாய்க்குமொரு
புத்திபுகல் புதல்வன் உண்டோ ?

கோபாத்தி ரத்தினாற் பிள்ளைதா யைக்குறைகள்
கூறின் அது குற்ற மாமோ ?
குற்றமே பார்க்கிலொரு சுற்றமுண் டோ ?கருணை
கூர்குழவியே! ஸாது வாம்
ஸ்ரீபார்த்த ஸாரதி தமக்கருளும் அம்மையே!
செங்கீரை யாடி யருளே
திருமுல்லை வாயில்வளர் ஒருமுல்லை வைஷ்ணவீ!
செங்கீரை யாடி யருளே. (8)

## (12 சீர் விருத்தம்)

19. ஶாமா ராகம் பாடிய வண்டார்
தண்டார் கொண்டாளே
சங்கம் பதுமம் இரண்டும் ஸந்நிதி
சாரக் கண்டாளே
வாமா சாரங் கௌலம் இரண்டும்
வணங்குங் கழலாளே
மஞ்சும் பஞ்சும் கொஞ்சிடும் அஞ்சு
வகைப்பூங் குழலாளே
நாமா காரம் இரண்டும் தாண்டிய
நாட்டில் இருப்பாளே
நாளொண் கோள்கள் இறைஞ்சிடு மேரு
நலங்கொள் பொருப்பாளே
ஸ்ரீமா னாகிய மாமால் தங்காய்!
செங்கோ செங்கீரை
திருமுலை வாயில் வயிணவி நங்காய்!
செங்கோ செங்கீரை. (9)

20. யமநிய மாதிசொல் அட்டாங் கத்தவ
யோகர் இடத்தாளே
இன்னியல் ஏழிசை நாடக முத்தமிழ்
ஏற்ற நடத்தாளே
ஸமயா சாரத் தற்பரை யாம்ஸ்ரீ
சக்ர தலத்தாளே
ஶங்கரி ஶாங்கரி ஶாம்பவி நாமச்
சக்ர(ம்) வலத்தாளே

இமய முதற்றென் குமரி வரைத்தலம்
எங்குந் திகழ்வாளே
எண்ணெண் கோடியர் யோகிநி மார்சூழ்ந்
திசைசொற் புகழ்வாளே
அமயமி தேற்றதொர் ஸமயமி தெங்கள்முன்
ஆடுக செங்கீரை
அநமிடு வடமுலை வநவயி ணவியே!
ஆடுக செங்கீரை. (10)

(செங்கீரைப் பருவம் முற்றும்)



# III. தாலப் பருவம்

**(14 சீர்ச் சந்த விருத்தம்)**

***தத்தன தத்தன தத்தன தத்தன***
***தனனா தானா தானானா***

21. நக்கனை அக்கனை முக்கண னைக்கவர்
நகிலாய் தாலோ தாலேலோ
நற்றமிழ் முத்தமிழ் மெத்த வளர்த்தருள்
நளிநீ தாலோ தாலேலோ
செக்கர் நிறக்கம லக்கணி முக்கணி
சிவையே தாலோ தாலேலோ
சித்ர விசித்திர வத்திர னைப்பெறு
ஜெநநீ தாலோ தாலேலோ
ஒக்க இலக்கண மிக்க இலக்கியம்
உடையாய் தாலோ தாலேலோ
ஒப்பிலி அப்பனி ருப்பொர் பொருப்புறை
உமையே தாலோ தாலேலோ
மைக்கணி உத்தர திக்குமு லைப்பதி
வளர்வாய் தாலோ தாலேலோ
மற்று வயிட்டண விப்பெயர் உற்றகண்
மணியே தாலோ தாலேலோ (1)

**(14 சீர் விருத்தம்)**

22. மகவாய் உனைப்பெற்று மஹியிலே பாராட்டி
மடிமீது சீராட்டி யும்
மார்மீது தோள்மீது வைத்துச்சி மோந்துயர்
மணித்தொட்டி லூடாட்டி யும்
பகலிரவு தாலாட்டி நீராட்டி மென்முலைப்
பாலூட்டி மதிகாட்டி யும்
பால்பெய்த சோறூட்டி யும்வளர்செய் தாய்மார்
படைத்தபே றென்ன பகர்வேன் ?
இகவுலகில் இதுகாறும் இறைவிநின் மேற்புலவர்
யாத்தபிள் ளைத்தமி ழெலாம்
எங்குறினும் ஒட்டக் கொணர்ந்துதா லப்பருவம்
எத்தனையும் இசைபாடு வேன்
தகஅழேல்! பொறுமையைச் சோதியேல்! கண் வளர்தி!
தாலோ குழந்தை தாலோ
சம்பகா ரணியஅம் பாபுரியெம் வைஷ்ணவீ!
தாலோ குழந்தை தாலோ. (2)

**(12 சீர் விருத்தம்)**

23. ஓமத் தீமுன் றொழுக்கமுடன்
ஓவா துவளர்த் தொளிர்மறையோர்க்
கூராச் சிவலோ கத்தையருள்
ஒப்பில் கருணை உருவுமையே!
காமக் க்ரோத லோபமதம்
காதல் மோஹம் மாச்சரியம்
கணக்கில் இடம்பம் ஈருடைமுக்
கரணத் தற்பம் அஸூயைபத்தும்
நாமத் தலைபத் தாப்படைத்து
நவக்கோ ளைஒடுக் கிராவணனை
நாரா யணிநீ இராமனெனா
நலக்க உதித்துச் சங்கரித்தாய்!
சாமச் சிலைமா மேருமுடித்
தலத்தாய் தாலோ தாலேலோ
சரணக் கிரணக் கொடிமுல்லைத்
தலவைஷ் ணவியே! தாலேலோ. (3)

24. நண்ணார் புரமூன் றெரித்தவர்புன்
னகைபோ லன்றித் தண்மைசெய்புன்
னகையாய் முகையார் நகில்மேற்பூண்
நகையாய் புகையார் முகிற்குழலாய்

எண்ணா யிரவர் கழுவேற
ஏடும் நதியில் எதிரேற
இறைமைச் சைவம் ஈடேற
எளியேன் பிறவி கடைத்தேறப்

பண்ணார் தமிழைப் பிரமபுரப்
பதியூ டுதித்துப் பாடிஎங்கும்
பரப்பித் திருநீற் றொளிநிரப்பும்
பாலன் ஸம்பந் தனுக்கன்று

தண்ணார் கோலக் காவில்ஒலித்
தாளம் தந்தாய் தாலேலோ
தைவச் சைவத் திருமுல்லைத்
தலவைஷ் ணவியே தாலேலோ. (4)

25. மோட்டா லிலையூ டுலகேழும்
மூடி முகிழ்த்துப் புரந்தருளும்
மோஹாம் பிகையே இடைமரூதூர்
மூகாம் பிகையே மூத்தவனாம்

கோட்டா னையையீன் பிடிவடிவக்
கோமாட் டியெனக் கும்பிடுவார்
குற்றங் குறைகள் செய்திடினும்
கோபிக் காமற் பொறுத்தருளும்

நாட்டாண் மைக்கோர் நாயகமே!
நந்தா விளக்கே நமஶிவய
நாமத் தெழுத்தஞ் சோதுளத்தின்
நாப்பண் மறையின் அடிமுடிசேர்

தாட்டா மரைவைத் தின்னருள்செய்
தாயே தாலோ தாலேலோ
சந்தக் கந்தத் தருமுல்லைத்
தலவைஷ் ணவியே தாலேலோ. (5)

26. நாரா யணாய நமஎன்ன
நவின்ற மகனை "நாரணனும்
நலதெய் வமெனில் எங்குளனோ
நான்கா ணக்காட் டெ"னக்கறுத்தப்

பாரா யணத்தை இனிவிடுகென்
பநகன் கநகற் கெங்குமுளன்
பரந்தா மனெனப் ப்ரஹலாதன்
பருத்த தூணைக் காட்டஅவன்

ஆரா யாமல் அதைஉதைக்க
அவண்ஆ ளரியாய் அவதரித்தன்
றாகம் பிளந்து குருதிகுடித்
தப்பற் கொன்று மகற்காத்துத்

தாராயணிந்த செழுங்குடர்மார்த்
தலைவீ தாலோ தாலேலோ
தங்கத் துங்கத் தனிமுல்லைத்
தலவைஷ் ணவியே! தாலேலோ. (6)

27. ராமா யணமா பாரதம்பார்
ரஸிக்கும்பாக வதம் பாத
ராய ணரெனும் வியாதமுநி
ரமித்த பதினெண் புராணங்கள்

தாமா யவொணாத் தத்துவம்நீ
சாற்றுந் தேவீ பாகவதம்
தனிலோ ஆதி பராசக்தித்
தனித்தத் துவமாப் பேசலுற்று

மாமா யைஎனா உலகெங்கும்
மலர்ந்து பரந்து விரிந்துதிகழ்
மாகா ரணத்தால் வைஷ்ணவியென்
மஹிமை நாமம் வாய்க்கலுற்றாய்!

சாமா தேவீ! ஸ்ரீதேவீ!
தாலோ தாலோ தாலேலோ
ஸங்கப் பொங்கர்த் தமிழ்முல்லைத்
தலநா யகியே தாலேலோ. (7)

28. யமளார் ஜுநபஞ் ஜநஞ்செய்த
யமுநா தீர விஹாரிகணன்
யவ்வ நக்கோ பியர்கூறை
யாசிக் கத்தந் தருள்காம

நமனாம் ராதா நாயகன்ஸ்ரீ
நலபூ நீளா பதிஸ்ரீமந்
நாரா யணற்கும் அவன்படைத்த
நாலு முகற்கும் நமுசிக்கும்

யமரா ஜனைப்போன்ம் உருத்திரர்க்கும்
எட்டுத் திக்குப் பாலகர்க்கும்
இறைமா ஹேஶன் ஸதாஶிவற்கும்
இன்னும் தேவர் குழாங்கட்கும்

தமர்மா தருக்குந் தொழில்விதிக்கும்
தலைமைப் பரையே தாலேலோ
சரதச் சுரதத் தளிமுல்லைத்
தலவைஷ் ணவியே! தாலேலோ. (8)

29. 'ணா' வென் எழுத்தின் முன்னர்உற
'ந' ச்சேர் பவாநிக் கூடுதுறை
நதியார் ஸங்க மேசுவரர்
நாடும் வேத நாயகியே!

'தா'வென் றிடற்கும் 'கொடு' எனற்கும்
தக'ஈ' எனற்கும் தராதரங்கள்
சாற்றும் புலவர் தமிழ்க்கஞ்சித்
தாயுன் முன்னின் றருளென்பேன்

போவென் றுதறித் தள்ளாமற்
புலையேன் புகலும் பொருட்படுத்திப்
போய்ப்போய் மீண்டும் புவிக்கிழியாப்
புரைதீர் முக்திப் பதங்கொடுப்பாய்!

சாவென் றுதிப்பென் றிவைகிடையாச்
சக்தீ தாலோ தாலேலோ
தருமெய்த் திருவுத் தரமுல்லைத்
தலவைஷ் ணவியே! தாலேலோ. (9)

30. யந்த்ரம் தெரியேன் இயல்தெரியேன்
இசைநா டகமுத் தமிழறியேன்
இருக்கோ டெஜுர்ஸா மாதர்வணம்
எனும்ஈர் இருமா மறைதெரியேன்

மந்த்ரம் தெரியேன் ஜபமறியேன்
மநத்தை அடக்கும் வழிதெரியேன்
மாயை கந்மம் ஆணவமும்
மலத்தை வெலவும் வகை அறியேன்

ரந்த்ரம் தெரியேன் வழிபாட்டின்
ரஹஸ்யங் களையும் அறியேன்நான்
ராஜ ராஜேஶ் வரிஉனையே
ராவும் பகலும் தொழவாம

தந்த்ரம் தெரியேன் த்யாநமிலேன்
தனையும் ஆண்டாய் தாலேலோ
தருமக் கருமச் செனைமுல்லைத்
தலவைஷ் ணவியே! தாலேலோ. (10)

(தாலப் பருவம் முற்றும்)



# IV. ஸப்பாணிப் பருவம்

### (14 சீர் விருத்தம்)

31. ஓம்ப்ரணவ நாதத்தின் உள்ளொலிய தாய்ஒலித்
தோங்கொளி விரிக்கும் ஒளியே
உடல்நடுவுள் ஆதாரம் ஓராறை யுங்கடந்
துச்சியா தார மாறும்

போம்ப்ரகா ரத்தையுந் தாண்டிச் சஹஸ்ரார
பூதரத் துச்சியின் மேல்
புகலுந் துவாதஶாந் தப்பெரு வெளிக்கண்அநு
போகமு முடிந்தி டத்தே

காம்ப்ரநா தக்கடவு ளானகா மேஶ்வரரொ
டழிவில்கா மேஶ்வரியு மாய்
அங்கத் தமர்ந்தவர்சொல் கொஞ்சிப் புகன்றணைய
ஆலிங்க நஞ்செய்து கொள்

தாம்ப்ரசூ டக்கொடிகொள் வண்டமர் திருக்குழலி!
ஸப்பாணி கொட்டியருளே
சம்பகா ரணியம்வளர் அம்பிகையெம் வைஷ்ணவீ!
ஸப்பாணி கொட்டி யருளே. (1)

32. நள்ளிரவு வுலாவருங் கொள்ளிவாய்ப் பேய்பூத
நாதகண முநிபி சாசு
நரரைமணில் இடுகாடு சுடுகாடும் ஊடாடு
நானா விதப்பி ரேதம்

கள்ளிமுது காட்டில்வளர் குண்டைக் குறட்பூத
கணமும்வே தாள கணமும்
கரிகாட்டு வைப்பேவல் பில்லிஸூ நியமாதி
கார்யகா ரணகர்த் தரும்

வெள்ளிதொறு மேனுமுனை வழிபாடு செய்யாது
மேவஸுரர் தீக்கு ணங்கொள்
மேவலரும் உன்னைத் துதிப்போரை இழிவாய்
விளம்புபுல் லறிவி னோரும்

தள்ளினுந் தள்ளொணா துள்ளமெய் நடுங்கவே
ஸப்பாணி கொட்டி யருளே
தண்முல்லை வாயில்வேற் கண்வல்லி வைஷ்ணவீ!
ஸப்பாணி கொட்டி யருளே. (2)

33. மோலியில் அணிந்துள்ள பிறைசரிந் தாடாமல்
முத்தாரம் உதிர்த ராமல்
முக்கணுள் நடுக்கணின் றக்கிநி வராமல்மென்
முடிக்குழல் கலைந்தி டாமல்

ஆலிலை வயிற்றுள்ள அண்டபிண் டங்களவை
ஆடாமல் அசையாமல் நீள்
அணிகலனுள் வளையல்சரி கங்கணங் காப்புவகை
அங்குலிய நுங்கிடாமல்

மேலிளைப் பால்நளிந ம்ருதுவான திருமேனி
வேர்வுறா மற்கொ ளாமல்
விழிகொண்டு நோக்குவார் கண்ணே றுறாமல்இரு
மென்கரமு நொந்திடா மல்

சாலிவிளை கின்றநீள் வேலிவட முல்லையாய்!
ஸப்பாணி கொட்டி யருளே
தாயான வைஷ்ணவீ! சேயாய் இருந்துநீ
ஸப்பாணி கொட்டி யருளே. (3)

34. பகவதி புராதநி பராபரி நிராமயி
பரம்பரி முராரி பகிநீ
பண்டஹரி ணீசண்ட முண்டஜித சண்டிகே
பாசாங்கு சாங்க தரிகார்

முகலலா டாக்ஷிகா மாக்ஷிவா மாக்ஷிஜீ
மூதநீ லாய தாக்ஷி
முண்டகாட் சீவிசா லாக்ஷிஏ ணாக்ஷிஹே
முதிதகரு ணாக டாக்ஷீ

மகரமீ நாக்ஷிசக்த் யாயுதாட் சீநீல
வநஜாக்ஷி அஞ்ஜநாக்ஷீ
மதுகரசி லீமுகசி லீமுகாட்சீ பாநு
மதநாத பாக்ஷி ஸப்த

ஸகரஸா கரஸமா நாக்ஷிஇந்த் ராக்ஷிஇரு
ஸப்பாணி கொட்டி யருளே
தடமுல்லை கொல்லைபடர் வடமுல்லை வைஷ்ணவீ!
ஸப்பாணி கொட்டி யருளே. (4)

35. கங்கா தரன்கண்டு பொங்கா தரங்கொண்டு
காதல்மேற் கொண்டாட வும்
கண்டாலும் ஒருநாமம் விண்டாலும் நெஞ்சங்
கலங்கஸுரர் திண்டாட வும்

ஸிங்கா ஸநம்குடை சிருங்கார மாளிகை
திரண்டே வரும்ஸேனை கள்
ஸிந்துரம் கந்துகம் தேர்பதா திகள்முதல
சிங்காரம் விட்டோட வும்

டங்கார நாதங் கொடுத்துவிலை நாணேற்றி
லங்கா புரத்தரச னைச்
சங்கார மாடியொர் அலங்கார ராமனாச்
சநகியொ டயோத்தி ஆண்ட

சங்காய்த பாணி அயன் அங்கார்வ மூட்டவே
ஸப்பாணி கொட்டி யருளே
தருவில்வ வநமுல்லை வருசெல்வ வைஷ்ணவீ!
ஸப்பாணி கொட்டி யருளே. (5)

36. வச்சிரப் படையாளி இச்சைகள் எலாம்பூர்த்தி
மயமாக அயிராணியும்
மாங்கல்ய தந்துவொடு வாழ்ந்திடவும் அன்னார்கை
மலர்முடியின் மேற்கூப்ப வும்

முச்சிரப் படையாளி மெச்சிநன் றென்றிசை
முழக்கிஜஞ் சிரமாட்டி முன்
மொய்ம்பார்ந்த ஒருபதுகை யாற்றாளம் இடவும்அயன்
முடியசைத் தேகூட வும்

மெய்ச்சிறப் படையாளி சக்கரப் படையாளி
மென்துழாய்த் தொடையாளி கைம்
மேளதா ளங்கள்கொடு புகழ்பாடி நடமாடி
விளையாடல் செயவு மலர்மேல்

தைச்சிருப் புடைஇருவர் நச்சமுன் கொட்டல்போல்
ஸப்பாணி கொட்டி யருளே
தடமார்பின் முலைமுல்லை வடவாயில் வைஷ்ணவீ!
ஸப்பாணி கொட்டி யருளே. (6)

37. தேடுமறை நான்காட முப்பத்து முக்கோடி
தேவர்கள் குழாங்க ளாடச்
சேயாட வேளாட ரதியாட அயனோடு
தேவிகலை வாணி யாடப்

பாடுமிசை வாணர்பல கந்தருவர் கின்னரர்கள்
பதினெண் கணத்தர் ஆடப்
பாலாழி மேலாழி கைக்கொண்டு துயில்கண்ட
பரமபத நாதன் ஆடக்

கூடுமலர் மகளாட இந்திரனும் இந்த்ராணி
கூடஆ டக்கங்கை யாள்
கொண்டாடி ஆடஅரன் நின்றாட வேதாள
குலமாட ஆனை முகனைச்
சாடுமவ னாடஉட னாடிமுன் இசைத்தல்போல்
ஸப்பாணி கொட்டி யருளே
தப்பாத வடமுல்லை வைப்பான வைஷ்ணவீ!
ஸப்பாணி கொட்டி யருளே. (7)

38. வாரிதி நடுங்கஈ ரேழுல கொடுங்கவந
மாகாளி நடு நடுங்க
வானின்மிசை முகிலேழும் ஓசையின் அடங்க நெடு
வானிடி கிடந்தொ டுங்க
மூரியுள எண்டிசைக் கரிநடுங் கச்சக்ர
மூர்த்தகிரி கிடுகிடுக்க
முட்டவரும் அட்டகுல நாகமும் பாதாள
மூலைக் குளே பதுங்க
வேரிற விழுந்தட்ட குலகிரியும் இடிபட
விடங்கக்கி ஆதி சேடன்
வேர்த்துற்று விறுவிறுத் தவனியைத் தாங்காமல்
விட்டோட விந்த மேரு
சாரிடமி லாதுசா யக்கொட்ட வலகையால்
ஸப்பாணி கொட்டி யருளே
தமிழ்சொன்ன வடமுல்லை அமிழ்தென்னும் வைஷ்ணவீ!
ஸப்பாணி கொட்டி யருளே. (8)

39. ஸுவணமா மேருமுடி சிந்தா மணிக்குடில்
ஸுகந்தநீ பாடவி நறாச்
சொரிதாம ரைக்காடு ஸ்ரீசக்ர யந்திரம்
தொல்லைஐம் பிரமா தநம்
லவணமொத் தன்றிநனி தித்திக்கும் இன்னமுத
லலிதவா ரிதிஸ்ரீ நகர்
லகுபூஜை வாமகௌ லாசாரர் பயிலிடம்
லதைக்கற்ப கக்கா நநம்

உவணமுத லாம்பறவை இனமும் பறந்துசெ
லொணாமணித் தீவு கதிரோன்
உடுபனொடு முளரியெனு மும்மண்ட லங்கள்விதி
உண்ணா நராரி உரமார்

தவநமுடி ஜடையனிடம் இடமாக உடையநீ
ஸப்பாணி கொட்டி யருளே
தவளமுலை வநமேவு பவளஇதழ் வைஷ்ணவீ!
ஸப்பாணி கொட்டி யருளே. (9)

40. தேவாதி தேவர்களு மூவாத மூவரொடு
ஸித்தவித் யாதரர் களும்
ஸேவிக்க நெஞ்சினிடை பாவிக்க வேண்டிமகிழ்
சீதள பதாம்பு யத்தால்

ஏவாத தேவரிலை நிற்கென்னில் அதுசிறிதும்
என்றுமிகை யாகாது காண்
எண்ணரிய பிறதெய்வ ராசிகள்கை யாற்செய்வ
இணையில்நின் தாளிணை செயும்

காவாது கைவிடிற் கதிவேறி லேனின்று
கைகூப்பி வேட்டல் உன்றன்
கழல்கூட இல்லைஇரு கரமொன்று சேர்த்தெனிரு
காதுகுளி ரத்தட் டியே

கோவாத முத்தமே! சாவாத சக்தியே!
கொட்டியருள் ஸப்பாணியே
குளிர்முல்லை வைஷ்ணவீ! ஓவாது நோவாது
கொட்டியருள் ஸப்பாணியே. (10)

(ஸப்பாணிப் பருவம் முற்றும்)



# V. முத்தப் பருவம்

## (14 சீர் விருத்தம்)

41. வாளரவு தருமுத்தம் வாழைகமு குகுமுத்தம்
மால்யானை தந்த முத்தம்
மழைமுத்தம் இருவகைய கழைமுத்த முதலையும்
வராஹமும் உதிர்த்த முத்தம்
கோளவையுள் வெண்மதி கொடுத்தமுத் தங்கரிய
கூபாரம் ஈன்ற முத்தம்
கோட்டுமுத் தஞ்சிப்பி ஈட்டுமுத் தம்பெண்டிர்
குழைகந்த ரத்து முத்தம்
நாளமுறு தாமரையின் முத்தமாப் பன்முத்தம்
நற்சாலி நென்முத்தம் நீள்
நயஉடும் பின்முத்தம் நலதெங்கின் முத்தமூர்
நத்தையீந் திடுமுத்த முண்
டாளவிலை யுண்டவைக் குன்முத்தம் விலையில்லை
அருள்வாயின் முத்தம் அருளே
அல்லூர வநமிலின் சொல்லூறு வைஷ்ணவீ!
அருள்வாயின் முத்தம் அருளே. (1)

42. யஜமாநி நீயெனக் கியானடிமை நின்றனக்
கீதுண்மை என்று மலவோ
யானேற்ப துன்னிடத் துலகிற் கிடைக்கின்ற
எம்முத்து மல்ல அறிவாய்
நிஜமாக நின்வாயின் முத்தங் கிடைத்திடில்என்
நீள்பிறவி முற்றும் ஒழியும்
நிலமீதில் இனிவந்து பிறவாத முக்திஎனு(ம்)
நெடுவீடு வந்தெய் துறும்
புஜமேழும் ஒன்றுமுடை ரஜதா சலக்கடவுள்
பூவாய் நுகர்ந்த முத்தம்
புகர்மா முகத்தானை முகமாறு டைத்தேவு
பொலன்வாய்கள் பூத்த முத்தம்
கஜமேறும் ஐயன்வயி ரவன்வீர னுங்கண்ட
கனிவாயின் முத்தம் அருளே

கடல்மல்கு சென்னைநகர் வடமுல்லை வைஷ்ணவீ!
கனிவாயின் முத்தம் அருளே. (2)

43. ராஜாத்தி நீயென்ன மதுரா புரிக்கரசி
ரங்கரா ஜன்ஸோ தரீ
ராஜீவ நயநநட ராஜன்மகிழ் காதலீ
ரஜதகிரி ராஜனிடம் வாழ்
ராஜாத்ரி ராஜன்மகள் தக்ஷப் ப்ரஜாபதியின்
ராணிமகள் மலய த்வஜ
ராஜன்மகள்கோவிந்த ராஜஸொரு பீ!த்யாக
ராஜசிவ தூதீ! பினும்
நீஜாக்ர தத்துமகிழ் மருமகளிர் இருவரும்வி
ணோர்தேவ ராஜன் மகளும்
நெடுவள்ளி மலைநம்பி ராஜன்மக ளும்மேலும்
நீள்வரத ராஜன் என்னும்
பீஜாத்தி யூர்த்தேவ ராஜன்மக ளிருமாவர்
பின்முத்தி னுக்கொர் குறையோ ?
பினுமுத்தம் ஈந்தருள்க வநமுல்லை வைஷ்ணவீ!
பினுமுத்தம் ஈந்தருள்க வே. (3)

44. மலைவேந்தன் மைந்தனிற் காகையாற் குறைவில்லை
மலைமுத்தி னுக்கென்று மே
மதலையருள் ஒருபுதல்வன் ஆனையே ஆதலால்
மதிமுத்தம் நிதியொத்த தே
சிலைவேந்தன் ஒருதாதை ஆதலால் நிறைவுகட்
செவிமுத்த மூல முத்தம்
செழியன்ஒரு தந்தையாற் கேள்வியிலை கடல்சங்கு
சிப்பிநந் தீன்முத் தவைக்
கலைவேந்த னைக்கறுவி ராமாவ தாரிநீ
ஆதலால் அவையனைத்தும்
அவனாக வந்தும்நீ கேளாம லேதருவன்
அணிகலக் குழையு னக்காம்
கலைவேந்தன் முத்துமுன் காதிலெனில் ஏதுகுறை ?
கனிவாயின் முத்தம் அருளே
கடமருவு தடம்விரவு வடமுல்லை வைஷ்ணவீ!
கனிவாயின் முத்தம் அருளே. (4)

**45.** ராகேந்து முதலாச்சொல் இருபதிட முந்தரளம்
இயல்பிற் பிறக்கும் இடமா
ரத்நச் சுருக்கத்து ரைக்கப் பெறற்குற்ற
இத்தனை இடத்து முத்தும்

வாகேந்து நன்முத்த மல்லஏற் றத்தாழ்வு
வாய்க்கவாய்ப் புறுமுத்த மே
வகைவகைய குற்றங்கள் பலவுண்ட வற்றிற்கு
மடிதவறி வீழில் உடையும்

யோகேந்த்ர ஸங்கத்தின் உள்ளத்தில் ஒளிர்முத்தம்
உன்றன்வாய் உசித முத்தம்
ஒருகுறைவி லாததொரு விலையிலா ததுவீழில்
உடையாத தார்க்கும் அரிது

மாகேந்த்ர நீலப் புயக்குஹனை முத்தமிடு
மலர்வாயின் முத்தம் அருளே
வடமுல்லை வாயிலருள் நடமல்கு வைஷ்ணவீ!
மலர்வாயின் முத்தம் அருளே. (5)

**46.** மதிமுத்த மாந்திலதை அவிமுத்த மாங்காசி
வண்புலவர் சத்தி முத்தம்
மணிமுத்த மாநதிகொள் முதுவெற்பு கோமுத்த
மாத்தலமென் ஆவடு துறை

நதிமுத்த மற்றுமொர்வெ ணதிகூடல் ஐயாறு
நணுகுவேய் முத்தர் திருவூர்
நான்முத்தி யாநவிலு பதமுத்தி பரமுத்தி
நல்குமுத் தீசர் பதிமேல்

விதிமுத்தி யூர்கண்டி யூர்முத்தி தரும் ஊர்கள்
மேலுமோர் ஆறாச் சொலும்
வியன்மாயை வடமதுரை தென்காஞ்சி துவரைஎழில்
மிகும்அவந் திகைஅ யோத்திப்

பதிமுத்தி யூர்கள்பிற பதினொன்றும் உடையநீ
பவளவாய் முத்தம் அருளே
பயில்முத்தி தருமுல்லை ஒயில்வநமில் வைஷ்ணவீ!
பவளவாய் முத்தம் அருளே. (6)

47. ஐம்பத்தொ ரட்சரோச் சாரணத் துடனுச்சி
அணிநுதல்க ணிணைஇரு கனம்
அள்ளிணையொர் மூக்குவாய் இதழிரண்டொருகழுத்
தம்புயம் இரண்டு ளங்கைச்

செம்பத்து மம்பத்து விரல்களிரு தனம்உந்தி
திரள்தொடைகள் இருமுழங் கால்
செப்பிணைக ளாங்கணைக் கால்புறங் கால்நிறஞ்
செய்யகுதி கால்உளங் கால்

அம்பத்து விரல்களொ டனைத்துக்கு முத்தங்கள்
ஐம்பத்தொ ரெண்க ணக்கில்
ஆசை அன் போடெண்ணி ஈசைநிற் கேதருவன்
அத்தனைக் குங்கேட்ப தொன்

றொம்பத்தில் எட்டேழில் ஆறைந்தில் நான்மூன்றில்
ஒருவாயின் முத்தம் அருளே
ஒருமுல்லை யங்கற்பின் வருமுல்லை வைஷ்ணவீ!
ஒருவாயின் முத்தம் அருளே. (7)

48. க்லீங்கார நாதக் கழற்சிலம் புட்பரல்கள்
கிளர்செய்ய மணியு முத்தும்
கேழ்முத் திழைத்தகா லாழிகால் விரலில்மிகு
கெட்டிமுத் தொட்டர சிலை

ஓங்கார மேகலைவெண் முத்தஅரை ஞாண்இடுப்
புட்யாண முற்று முத்தே
ஒவ்வொரு கரத்தினிலு முத்துவளை பத்துவிரல்
உற்றமோ திரமு முத்தம்

தாங்கார மாயணிகை தனமார்பில் வகைவகைய
தரளமே வாகு வலயம்
சங்கொத்தமென்கழுத் தணிமதா ணியுமுத்து
தண்ணகையு மூக்குத்தி யும்

பாங்கார மேகுழை நுதற்சுட்டி முத்தெதும்
பாழ்க்காது முத்தம் அருளே
பயிலும்அம் பாபுரியில் மயிலனைய வைஷ்ணவீ!
பரிவுற்று முத்தம் அருளே. (8)

## (12 சீர்ச் சந்த விருத்தம்)

***தத்தன தத்தன தத்தன தத்தன தத்தன தனதத்தா***

49. ஸௌக்கிய மிக்கிம யச்சிலை முற்றரு
ஸத்துவ மலைமுத்தே
தைத்தியர் புத்தர் மதித்த பயக்கடல்
தத்திய அலைமுத்தே
ஐக்கிய மெய்த்தவ ளப்பது மத்தலர்
அர்ப்பணி கலைமுத்தே
அற்புத விற்பனர் கற்பனை யிற்பொழி
அக்கவி மழைமுத்தே
ஸக்கிய மெத்திய வித்தக முத்தமிழ்
தைத்தினி கழைமுத்தே
தத்துவ லக்ஷண நற்சுதை பக்ஷண
ஸர்ப்பநன் மணிமுத்தே
முக்கிய உத்தர திக்கு முலைப்பரை
முத்தம தருள் சற்றே
முக்கண் வயிட்டண விப்பெயர் முப்புரை!
முத்தம தருள் சற்றே. (9)

## (ஷை வேறு)

***தந்தன தந்தன தந்தன தந்தன தத்தன தத்ததனா***

50. ஸௌந்தரி யந்திரை பொங்கு செழுங்கடல்
ஸத்திய மொத்தவளே
தண்டமிழ் வண்டமிழ் பைந்தமிழ் செந்தமிழ்
சட்ட அளித்தவளே
அந்தரி ஸுந்தரி கந்தரி கந்தரி
அட்ட மலர்ப் ப்ரியையே
ஐம்பதில் ஒன்பதி ரண்டுகு றைந்தறம்
அத்தம் வளர்த்தவளே
திந்தரி தொங்கிட தந்தன என்றொலி
சித்ர நடத்தவளே
செந்திரு இந்திரை சந்திரை வெண்கிளி
திக்கடை மெய்க்கணியே

முந்தரி இந்திரன் வந்து தொழுஞ்சிவை!
முத்தருள்! வைட்ணவியே!
மொய்ம்புறும் அம்பை புரம்பொலி அம்பிகை
முத்தம ளித்தருளே. (10)

(முத்தப் பருவம் முற்றும்)



# VI. வாரானைப் பருவம்

## (12 சீர்ச் சந்த விருத்தம்)

*தாந்தன தானன தானதன தந்தா தனதன தனதனன*

51. க்லீம்பத நாயகி யேவருக
கெங்கா தரன்மகிழ் துணைவருக
கேந்திர வீடருள் தாய்வருக
கெந்தா சலமுறை பவள்வருக

ஓம்பத மார்பொரு ளேவருக
ஒன்றாய் விரிபல பொருள்வருக
ஓங்கிய மாதவ மேவருக
உண்பார் அநுபவி மதுவருக

மேம்பதம் நாலருள் வாள்வருக
விந்த்யா சலம்அமர் பவள்வருக
வேங்கட மாமலை யாள்வருக
வெண்ஸ்ரீ நகர்வயி ணவிவருக

ஆம்பத மார்கழ லாள்வருக
ஐம்பால் அமர்குழ லினள்வருக
ஆண்டவ ளே!உட னேவருக
அம்பா புரவயி ணவிவருக. (1)

## (14 சீர் விருத்தம்)

52. ஐம்பூத மேவருக ஐம்பொறிக ளேவருக
ஐந்துபுல னேவருக என்

ஐங்கரண மேவருக ஐங்கருவி யேவருக
ஐந்தொழிலி னாள்வருக அம்
பைம்பூவி னாள்வருக ஐந்தோதி யாள்வருக
ஐந்துமறை யாள்வருக ஆ
டைஞ்சபையி னாள்வருக ஐம்பதியி னாள்வருக
ஐந்தெழுத் தாள்வருக பூ

சைம்பூதி யாள்வருக ஐந்தாறி னாள்வருக
ஐம்ப்ரேத மிசையள் வருக
ஐம்பிரம மேவருக ஐம்படையி னாள்வருக
ஐங்கோச உறையுள் வருக

ஐம்பூஜை யாள்வருக ஐம்பேரி னாள்வருக
ஐந்தருவி னாள்வருக வே
அம்பா புரிக்களங் கம்பான வைஷ்ணவீ!
அருள்வருகை யேதருக வே. (2)

(ஷ வேறு)

53. ஹ்ரீம்எனுங் கூட்டுப் பசுங்கிளி வருக
ஹ்ரீமெனும் பொழிற்குயில் வருக
ஹ்ரீமெனும் வாரிக் கவுத்துவம் வருக
ஹ்ரீமெனும் வநமயில் வருக

ஹ்ரீமெனும் குஹைப்பெண் சிங்கமே வருக
ஹ்ரீம்எனும் மலர்அனம் வருக
ஹ்ரீமெனும் கூட விளக்கொளி வருக
ஹ்ரீமெனும் மலைநதி வருக

ஹ்ரீமெனும் உறைக்குள் இருக்கும்வாள் வருக
ஹ்ரீமெனும் முகில்மதி வருக
ஹ்ரீமெனும் சிப்பி முத்தமே வருக
ஹ்ரீமெனும் புதரில்மான் வருக

ஹ்ரீமெனும் பாட்டின் உட்பொருள் வருக
ஹ்ரீமெனுந் தேவியே வருக
ஹ்ரீமொலி முல்லை வடவநத் திலகும்
ஹ்ரீம்பத வைஷ்ணவீ! வருக. (3)

### (12 சீர் விருத்தம்)

54. க்லீம்ஜெப மாறா நெஞ்சினர் உள்ளக்
கேண்மையள் வருவாயே
கிஞ்சுக வாய்ப்பசும் அஞ்சுக மாம்உயர்
கீர்த்தியள் வருவாயே
பூஞ்செடி பூங்கொடி போன்ம்உடல் மேன்மலர்
பூத்தவள் வருவாயே
பொற்றா மரைபுனல் வற்றா மதுரை
புரந்தருள் வருவாயே
தேஞ்செறி தீந்தமிழ் வாஞ்சைய ளாய்வளர்
செய்தவள் வருவாயே
செவ்விய வாய்மொழி திவ்விய மேனிகொள்
தெய்வதம் வருவாயே
ஆஞ்செனை மாநகர் உத்தர முல்லை
அகத்தவள் வருவாயே
அயிரவி வயிரவி செயிரவி வயிணவி
அம்பிகை வருவாயே. (4)

### (14 சீர் விருத்தம்)

55. சாரு ஹாஸை பார்வ தீசை
ஸம்ப்ர மேசை வருகவே
ஶார்வ ரீஶ வதந ரூப
சந்த்ர ஹாஸை வருகவே
மேரு வாஸ வநிதை புநிதை
விஜய லலிதை வருகவே
விமலை அமலை கமலை நிமலை
விபிந கமநி வருகவே
தாரு காதி அஸுர நாச
ஸமர ஜோதி வருகவே
சண்ட முண்ட பண்ட கண்ட
சண்டி கேசை வருகவே
பூரு காதி சூழும் அம்பை
புரவி லாஸை வருகவே
புண்ய நாம வைஷ்ண வீசை
போற்றி வருக வருகவே. (5)

**(12 சீர் விருத்தம்)**

**56.** முண்ணேர் தாட்டா மரைமுகிழ்த்த
முத்தே வருக அரும்புமுலை
முக்கட் கரும்பே வருககரு
முகிலே வருக செவிநுகரும்
பண்ணே வருக பசுந்தமிழின்
படிவே வருக நான்மறைப்பூம்
பாவே வருக ஜதிமுறையின்
பதமே வருக பனிமலையீன்
பெண்ணே வருக மலரிலன்னப்
பேடே வருக கண்ணிணையார்
பிணையே வருக கயிலைமலைப்
பிடியே வருக பிறப்பறுக்கும்
எண்ணே வருக அதற்குரிய
எழுத்தே வருக முல்லைவநத்
தெழிலே வருக வைஷ்ணவியாம்
இறைவீ வருக வருகவே. (6)

**(14 சீர் விருத்தம்)**

**57.** டாகிநி காகிநி லாகிநி ராகிணி
யாகிநி ஹாகிநி ஸாகிநியே
டண்டட டுண்டுடு டிண்டிமி என்றுந
டஞ்செய் பதஞ்சலி யாஉமைஏ
காகிநி யோகிநி போகிநி மோஹிநி
காமிநி மாலிநி கண்மணியே
காரணி ஆரணி நாரணி ஆரணி
காசிநி வாஸிநி பூரணியே
லோகிநி ஏகிநி பாகிநி கேகிநி
லோலிநி பத்மிநி சங்கிநியே
லோஹித லோசநி ஸ்ரீமத சாலிநி
லோக ஸுபாலிநி லாலிநியே
வாகிநி சோக விநாஶ விலாஸிநி
வாழ்வட முல்லையெம் வைஷ்ணவியே
வந்தருள் வந்தருள் வந்தருள் வந்தருள்
வந்தருள் வந்தருள் வந்தருளே. (7)

## (16 சீர் விருத்தம்)

58. 'யை'ந மோவென லலிதையின் ஸஹஸ்ர
ரஹஸ்ய நாமமோ திமையவள் வருக
யாக யக்ஞவி நாயகி வருக
யகர முத்தலைச் சூலிநி வருக

ஜைந ராம்அமண் சமணர்புத் தரையும்
சைவ ராக்குஸம் பந்தர்தாய் வருக
தாந தர்மம் நிறைந்தவள் வருக
தைவ வைதிக ஸம்ப்ரமி வருக

மைந யந்தகண் மலைமகள் வருக
மான்நல் ஊர்திகொள் காடுகாள் வருக
மடங்கல் ஏறிடும் மடந்தையே வருக
மால்வி டைக்கொடிப் பரியினாள் வருக

வைந தேயநல் வாஹநி வருக
மருவு பூரமூர் கலைமகள் வருக
வடக்கு மாலதி வநத்தினாள் வருக
வைஷ்ண விச்சிவை வருகை தருகவே (8)

## (ஷை வேறு)

***தத்தாதன தத்தாதன தத்தாதன தனன***

59. விச்சாதரர் ஸித்தாதிகள் மிக்கோதுமை வருக
மெய்ச்சாரணர் யக்ஷாதி மிகப்பாடமை வருக
வெற்பாதிபன் அற்பால்வளர் விற்போனுதல் வருக
விட்டேறு குஹற்கேதரு வித்யாவதி வருக

கைச்சாமரை யைச்சாரதி கற்பார்திரு இருவர்
கற்றாசை உறப்போட உகப்பாய்உடன் வருக
கட்டாரி விழிக்காதலி கட்காயுதை வருக
கட்டாணிநன் முத்தேகளை கட்காளிகை வருக

இச்சாகிரி யைக்ஞாநம் இயக்காதியொர் பரையென்
இப்பேர்பெறு சக்தீ! திரு எட்டானவள் வருக
இக்கார்மொழி யைப்பேசும் இசைக்கோகிலம் வருக
எத்தால்வழி பட்டாருளம் எட்டாதவள் வருக

மைச்சாமளை பொற்கோமளை மட்டார்குழல் வருக
வைத்தீசர னொத்தே அருள் வைப்பானவள் வருக
மட்பாலி வடக்கார்விலு வக்கான்வயி ணவியென்
வஜ்ராயுதை! பத்மாஸநி! வற்றாவர வருளே. (9)

**(28 சீர் விருத்தம்)**

***தான தத்த தான தத்த தான தத்த தனதனா***

60. சேத னச்ச ராச ரத்த சேத னத்தி வருகவே
தேவி பத்ர காளி உக்ர தீர சக்தி வருகவே
ஜீவ னுக்கு பாய பக்தி சேர்வ ரத்தி வருகவே
தேவர் மற்ற மூவர் நித்தல் தேர்பதத்தி வருகவே

ஆத னப்பு ராத நச்ச வாத நத்தி வருகவே
ஆறெழுத்தும் ஓரெழுத்தும் ஆனகொற்றி வருகவே
ஆயி ரப்பல் நாம முற்ற ஆர ணத்தி வருகவே
ஆக மப்பு ராண முற்றும் ஆய்ப ரத்தி வருகவே

ஓத னத்த நேகம் விட்ட ஊண்வி டத்தி வருகவே
ஊனு டற்கண் வாழு யிர்க்குள் ஊட கத்தி வருகவே
ஓல மிட்ட பால னிட்டம் ஊர்த னத்தி வருகவே
ஊமை யைச்சொல் பாடு வித்த ஊர கத்தி வருகவே

மாத னத்தர் ஆன பக்தர் மாம நத்தி வருகவே
வாசி கட்டு யோகர் சித்த வாரி ஜத்தி வருகவே
வாழ் வடக்கி லோர் முலைப்பொன் வாயில் நத்தி! வருகவே
மாது வைட்ண வீ!ஜ கத்தை வாழ வைக்க வருகவே. (10)

(வாரானைப் பருவம் முற்றும்)



# VII. அம்புலிப் பருவம்

(12 சீர் விருத்தம்)

61. மருவுந் திருவுத் தரகோச
மங்கை மங்க ளேஸ்வரிமேல்
வழங்கும் பிள்ளைத் தமிழென்ன
மதுரை நகரில் அராசாட்சி
அருளங் கயற்கண் மீநாக்ஷி
அம்மை பிள்ளைத் தமிழென்ன
அழியாச் சுழியற் றுணைமாலை
அம்மை பிள்ளைத் தமிழ்என்ன
தெருளுந் திருவெண் ணீற்றுமைமேற்
றிகழும் பிள்ளைத் தமிழென்ன
தென்காஞ் சிக்கா மாக்ஷியம்மை
தெய்வப் பிள்ளைத் தமிழென்ன
அருளுந் தெழில்வாக் கவைகேட்பான்
ஆட வருவாய் அம்புலியே
அம்பா புரிவாழ் வைஷ்ணவியோ
டாட வருவாய் அம்புலியே. (1)

62. நண்ணும் லலிதை ஆயிரமா
நாமச் சிறப்பின் நலமென்ன
நவிலும் லலிதை நூற்றெட்டு
நல்லோர் புகழ்முந் நூறென்ன
எண்ணும் துர்க்கை காளிஎழில்
இளையை வாணி பாலைஇவர்க்
கிலகா யிரநா மங்களென்ன
இன்னும் தேவி துதிகளென்ன
பண்ணுந் துதமிழ்ப் பழந்தக்க
யாகப் பரணிப் பாவென்ன
பரவுங் கடவூர் அபிராமிப்
பட்டர் திருவாக் கமுதென்ன
அண்ணும் அனைத்தும் கேட்டிடலாம்
ஆட வாராய் அம்புலியே

அம்பா புரிவாழ் வைஷ்ணவியோ
டாட வாராய் அம்புலியே. (2)

63. மேனாட் டவர்கள் மிகவளர்ந்த
விஞ்ஞா நக்கண் கொண்டுன்னை
விடுவர் அல்லர் தொடர்ந்தெய்தி
வீட்டை நிகர்வா ஸத்தலமுன்
பானாட் டிடற்கே முயல்கின்றார்
பாரோர் அங்கும் குடியேறல்
பலித்து விடிலப் புறமுனது
பழைமைப் பெருமைக் கிடமெங்கே ?
வானாட் டவரும் பின்மதியார்
மதியில் மதியே! பின்னுனக்கம்
மதியென் பெயரை வழங்கியதார் ?
மதித்திங் குடன்வந் தடிவணங்கில்
ஆனாச் சிறப்புற் றுய்ந்திடலாம்
ஆடற் குடன்வா அம்புலியே
அம்பா புரிவாழ் வைஷ்ணவியோ
டாடற் குடன்வா அம்புலியே. (3)

### (14 சீர் விருத்தம்)

64. அத்திரிஜன் வேந்தனொர் முயற்கூடு தண்ணவனொ
டநஸூயை மைந்தன் இரவன்
அமுதககதி ரோன்பபதி கௌமுதி நிஶாபதி
அரிச்சிகன் இமாஞ்சு புதனாம்
புத்திரனை ஈன்றதா ராபதி இராஜன்
புணர்த்துமத னன்குடை யெனப்
புகல்பெயர்கள் உன்றன் புராணத்தை மெத்தவும்
புரியவைக் கும்புவியு ளோர்க்(கு)
இத்திறப் பெயர்களால் ஏதுபுண் ணியமுனக்(கு)
இங்குவிளை யாட வந்தால்
ஈஶ்வரியின் அடியார்கள் சூழலில் இருக்கலாம்
இழிதகவெ லாம்போய் விடும்
மைத்திரிய 'தேவிஅடி யான்' என்ற பேரும்வரும்
வந்துவிளை யாடம் புலீ!

வடமுல்லை வாயில்வாழ் வைஷ்ணவித் தேவியுடன்
வந்துவிளை யாடம் புலி! (4)

65. தையலிவள் வாஸத் தலங்களொரு மூன்றினுட்
டண்மைசால் மண்டலமொர் நீ
தரளக் குழைக்கொத் திடக்காதில் இவளணி
தரம்பெற்ற அணிகலனும் நீ
பொய்யலமெய் கண்களொரு மூன்றினுள் இவட்குநீ
பொலிஇடப் புறவிழியு மாம்
பூண்பளுனை முடியில்நிற் கிவளுறவு புதிதல
புராதநம தான ஒன்றே
ஐயமெவன் வெகுதூரம் ஆகாய மீதுதனி
ஆடல்எவன் விளையாட வென்
றழைசெய்இவள் இன்றுபோல் அன்றுமென் றுங்குழவி
ஆதல்அறி யாய்கொல் மதியே
வையமுழு தும்முலவி ஓடலாம் ஆடலாம்
வந்துவிளை யாடம் புலி!
வடமுல்லை வாயில்வாழ் கடவுள்வைஷ் ணவியோடு
வந்துவிளை யாடம் புலி! (5)

66. அல்லாளி ஸோமன் குபேரன் ஸுதாகரன்வெ
ளாம்பல்வெண் கதிரோன் விது
அரிஇந்து மதிசந்த்ரன் மதியஞ்சொல் சசி திங்கள்
அலவன் ஶஶாங்கன் வள்ளி
எல்லாளும் உடுபதி பனிப்பாநு குமுதபதி
இரவிரவி ஶர்வரீஶன்
ஏணாங்கன் வீபத்து தெவ்வுதா னவன் வெள்ளை
இமகரன் நிஶாசரன் நிலா
இல்லாள் உரோஹிணிமன் ஆலோன் கலாநிதி
இனன் களங்கன் குரங்கி
இரமனூர் கலைஶீதன் என்றிவா றுன்பெயர்கள்
எண்ணிக்கை யுள்ளடங் கும்
வல்லாள் உமைக்குரிய நாமங்கள் எண்ணரிய;
வந்துவிளை யாடம் புலீ!
வடமுல்லை வாயில்வாழ் வைஷ்ணவி இனாளுடன்
வந்துவிளை யாடம் புலீ! (6)

67. ‘றி’க்குமுனர் ‘ம’ச்சேர்ந்த மானிடங் கொளுமுன்னில்
இவள்மா னிடங்கொளி யிடத்
தென்றுமுள் ளவள்மா னிடங்கொடுமுன் வந்துளாள்
எம்மா னிடங்குடி புகப்

புக்குமுனர் மானிடம் போந்தகுற மானிடப்
பூமானின் மாமி யாமான்
பொன்மான் விழைந்துகேள் பொன்மான் விதேஹனருள்
பூமானின் நாத்தி யாமான்

மிக்குவிளை யாடநிற் கேற்றமான் இந்தமான்
மேனிமான் மருளா திவள்
விழிமானின் விழியாத லால்இனம் எனாமகிழும்
வேற்றுமை நினைத்தி டாதால்

அக்குவளை யாஞ்சங்கு மைக்குவளை பூண்பவளொ
டம்புலீ ஆட வாவே
அம்பா புரிப் பொலன் கொம்பான வைஷ்ணவியொ
டம்புலீ ஆட வாவே. (7)

68. நின்னையே ஒக்குமிவள் வதனமிரு நுதல்நெற்றி
நேரொக்கும் நின்பிறை யினை
நின்பூ ரணைக்சுதிதி பூரணை இவட்குமிக
நேயமாம் திதியாதல் காண்

தன்னையே வேண்டுந் தவத்தினார்க் கீயவல
தயையினாள் ஆதலால் நின்
சாபங்கள் அழியவும் உரோகங்கள் ஒழியவும்
தண்ணருள் கொடுப்ப துறுதி

பின்னையே நின்னொடு பிறந்துளன ளேனுநின்
பேர்கொண்ட நாட்பிரிய னாம்
பெருமையரன் இவள்கொழுநன் ஆதலாற் றோழன்கு
பேரனிவள் ஏவல் புரிவன்

அன்னையே விழிசிவந் தால்வாழ்தல் அரிதுகாண்!
அம்புலீ ஆட வாவே!
அம்பா புரிப்பசுங் கொம்பான வைஷ்ணவியொ
டம்புலீ ஆட வாவே! (8)

## (12 சீர் விருத்தம்)

69. தண்ணங் குவளை எனப்பெறுமுன்
தாரத் தைஇவண் பூஞ்சோலைத்
தடத்திற் கண்டு ஜலக்ரீடை
ஸல்லா பித்துச் செய்திடலாம்
பெண்ணம் பிகைஎம் பிராட்டியின்பால்
பிரஸந் நமதார் நின்னொக்கும்
பிரகா சமுகம் தரிசிக்கும்
பேறு பெறலாம் மேலுமவள்
கண்ணங் கருணை நிலாநகையைக்
கண்ணாற் கண்டே களிகொளலாம்
காலை இரவி பலவற்றின்
கதிர்நேர் கழலின் காந்தியின்செவ்
வண்ணங் கொடுநீ ஒளிபெறலாம்
வாராய் ஆடற் கம்புலியே
வடமுல் லையில்வாழ் வைஷ்ணவிபால்
வாராய் ஆடற் கம்புலியே. (9)

70. மேனி தனிற்கொம் புள்ளகலை
மேலும் கொம்பில் கலையிரண்டும்
விளங்கும் உனக்கே இருகலையும்
விளம்பில் இவட்கும் உண்டறிதி
வானிற் றங்கு தடையின்றி
வரம்பின் றுலவும் வரந்தருவள்
மாய்ந்து தேயும் க்ஷயநோய்தேய்
மதிநீ பூர்ண மதியாவாய்
கூனிக் குறுகும் குறைதீர்ப்பள்
கூறுன் கலையோர் பதினாறே
கொற்றி கலைநாற் பதினாறாம்
கூப்பிட் டவுடன் குறுகாயேல்
ஆனி உனக்கே அழியாதே
ஆட வருக அம்புலியே
அம்பா புரிவாழ் வைஷ்ணவியோ
டாட வருக அம்புலியே. (10)

(அம்புலிப் பருவம் முற்றும்)

# VIII. அம்மானைப் பருவம்

**(14 சீர் விருத்தம்)**

**71.** ஓம்புமொரு பதினாலு லோகத்தை அண்டங்கள்
ஓரா யிரத்தெட் டினை
ஓதுமிரு நூற்றிருப தொடுநாலு புவநத்தை
உலகங்கள் வேறு முளதைக்
கூம்புமிரு கைவிரித் தேந்தும்அம் மானைபோற்
கொண்டுகொண் டாட்ட முடனே
கொஞ்சிவிளை யாடிஅவை அஞ்சிநெடி தோடஉயர்
கோளங்க ளாநி றுத்திப்
பூம்புவிகள் அத்தனையும் ஆக்கிப் புரந்துபினர்
போக்கித் திரோப வித்துப்
புக்கருளி ஐந்தொழிலும் ஆற்றைவர் களையுமென்
புன்னகையி னால்இயக் கும்
ஆம்புவன ஸுந்தரியென் அபிராம ஸுந்தரீ!
அம்மானை யாடி அருளே
அல்லைநிகர் கூந்தல்வட முல்லைவந வைஷ்ணவீ!
அம்மானை யாடி அருளே. (1)

**72.** ஐம்பதுடன் ஐம்பதும் அதோடெட்டு மானதோர்
அஷ்டோத் தரச்சதத் தால்
அல்லிமக ளும்வெளிய சொல்லின்மக ளும்பெரிய
அயிராணி யும்பிறர் களும்
தம்பதும வாயிதழ்க ளால்உன்ற னாமம்
ஸதாஜெபித் திட்ட வணமாய்ச்
சந்திரனை அக்கிநியை ஆதித்த னைச்சொல்ஒளி
தருமூன்று மண்டல மிதை
ஒம்பதுமு வடுவைவே றுள்ளநட் சத்ரங்க
ளொடுசெவாய் புதன்வி யாழன்
ஒளிவெள்ளி சநிஜந்து கோள்களை எலாம்ஒவொ
ருருண்டையம் மானை யாக்கொண்(டு)
அம்பதுமை போல்எதிர் அமர்ந்தாட ஆடுநீ
அம்மானை யாடி அருளே

அவ்வளர்செய் சோலைவட வில்வவந வைஷ்ணவீ!
அம்மானை யாடி அருளே. (2)

73. ஹ்ரீம்பத விளக்கமே ஹ்ரீங்கார வாக்யமே
ஹரீங்கார ரீங்கார மே
ஹரீங்கார ஜெபமுயன் றாங்காரம் அழிபக்தர்
ஹ்ருதயகம லத்தன் னமே
பாம்பதனி லேபள்ளி பாற்கடலின் மீகொள்ளு
பரமபத நாதன் உருவே
பாணிபயில் வீணைகொள்ஜ ராணிகல் யாணியே
பரமனாய்ப் பிரம னான
காம்பதன தோளியே ஐந்துமலர் வாளியே
கழைவில்லி யேகழை விலான்
காமரதி நாணஒரு காமேஶ னைக்குழைசெய்
காமேஶை யேகட வுளர்க்
காம்பதவி ஈந்தருள்செய் ஸாம்பஶிவை யே!மகிழ்வொ
டம்மானை யாடி அருளே
அம்பா புரிச்சம்பு செம்பாக வைஷ்ணவீ!
அம்மானை யாடி அருளே. (3)

74. ஸ்ரீம்பெயர்கொள் மந்த்ரபீ ஜாக்ஷர ஸொரூபமே!
ஸ்ரீதேவி பூதேவி மார்
தேவிநீ ளாவிதா தாதேவி மேதாவி
தேவேந்த்ரன் மாதேவி யார்
தாம்பெயர்த் தும்பெயர்த் தும்போந்து விளையாடு
தனியாசை மிக்கு வரவும்
தத்தமது கைசோர்ந்து மெய்சோர்ந்து போதுமினி
தாளா தெமக்கென் றெழீஇத்
தேம்பெயர அம்மனைக் காய்மேனி நோவஇரு
செங்கைசிறி தும்மயர்வு றாத்
தெய்வவிளை யாடலாம் சித்துவிளை யாடவல
தேவீ! உமா ஶங்கரீ!
ஆம்பெயர்கள் ஆயிரங் கோடியுடை யாய்!மகிழ்ந்
தம்மானை யாடி அருளே
அம்பா புரிக்கணமர் எம்பாலை வைஷ்ணவீ!
அம்மானை யாடி அருளே. (4)

75. ஸ்ரீசக்ர நாற்பத்து முக்கோண யந்த்ரமிசை
ஸ்ரீநகர நாயகி எனாத்
திரிகோண மையமுறு விந்துவடி வாய்த்திகழ்
திகம்பரி பரம்பரி செழும்

பூசக்ரம் அர்த்தமே ருப்பொருப் பின்னுமுரை
பூர்ணமே ருப்பொ ருப்புட்
பொலிகின்ற ஸ்ரீவித்யை யேநவ நவாவரண
பூஜைமகிழ் ஸ்ரீபாலை யே

மாசக்ர வாளகிரி அஷ்டகுல கிரிகயிலை
மாமேரு விந்தம் இமயம்
மற்றுமுள மலைகளவை முற்றுமம் மானைபோல்
வைத்தாட வலகை களால்

ஆசக்ர மப்படர்கள் நாசப் படக்கடிதின்
அம்மானை யாடி அருளே
அம்பா புரிப்பரமர் தம்பார்யை! வைஷ்ணவீ!
அம்மானை யாடி யருளே. (5)

76. மத்தாக மேருவினை நட்டுநா ணாகஒரு
வாஸுகி தனைச்சுற் றியே
வானவர்கள் தானவர்கள் மால்வாலி பாலாழி
மதனித்த நாள்எழு விடம்

பித்தாக உண்டசிவ பெருமான் கழுத்தைப்
பிடித்ததை நிறுத்தி அன்னான்
பெயர்நீல கண்டனா உயரவைத் தவனுதர
பிலஜீவ ராசிகள் எலாம்

கொத்தாக அந்நஞ்சின் மெய்த்தீமை யால்உயிர்
குடிக்கப் படாமை காத்துக்
கோலாஹ லக்கொடிய ஹாலாஹ லத்தைக்
குளிர்ந்தஅமு தாக்கி அரனார்க்(கு)

அத்தாக சாந்தியருள் அமுதஸஞ் ஜீவியே!
அம்மானை யாடி அருளே
அம்பா புரிக்கண்ஒரு பைம்பாவை! வைஷ்ணவீ!
அம்மானை யாடி அருளே. (6)

77. ராணீநீ மாணிக்கம் இந்த்ரநீ லம்புட்ப
ராகமர கதம்வச் சிரம்
ராசிவயி டூரியம் கோமேத கங்கொள்நவ
ரத்நதர ளம்பவள மார்
பூணினால் மேலிழைப் புற்றுநவ லோகம்ஜம்
பொன்சாத ரூபம்உயர் ஜாம்
பூநதப் பைம்பொன் கிளிச்சிறைநல் ஆடகப்
பொலமொடப ரஞ்சி முழுதும்
பேணியே அழகான சித்ரவே லைப்பாடு
பெரிதும் பிறங்க ஆக்கப்
பெற்றுமதி மின்னல்உடு வன்னிகதிர் ஐந்தையும்
பின்னுமொளி யால்விறல் கொளும்
ஆணிமாத் தங்கமய மாயமைந் துள்ளபல
அம்மானை யாடி அருளே
அம்பா புரிக்கணருள் செம்பார்வை வைஷ்ணவீ!
அம்மானை யாடி அருளே. (7)

## (12 சீர் விருத்தம்)

78. ஜம்பையு ரூபக மட்டியம் ஏகஞ்
சதுஸ்ரத்ரி புடையாதி
சார்ந்திடு திரிபுடை துருவம் அடம்பயில்
தாளமொர் ஏழ்ஜாதித்
தெம்பைவை திஸ்ர சதுஸ்ரமொர் கண்டம்
தெரிமிச் சிரமற் றும்
திகழ்ஸங் கீர்ணமென் ஐந்திவை ஐயெழு
தெளிதா ளந்தருமால்
பம்பை தவண்டைப் பறையொலி தாளம்
பலவகை நூற்றெட்டாப்
பகர்தா ளம்புகல் தாள ஸமுத்ரம்
படர்ஜதி மாலைக்கொத்
தம்பையெ னம்மனை! இன்னிசை பாடிஒள்
அம்மனை ஆடுகவே
அம்பை புரத்தை விரும்பமை வைஷ்ணவி!
அம்மனை ஆடுகவே. (8)

79. ராகம் பயிரவி பிலஹரி மலஹரி
ரஞ்ஜநி கல்யாணி
ராமப் ப்ரியைலலி தாங்கி மஹோதய
ரவிசந்த் ரிகைஸ்ரீபுந்
நாகவ ராளி அடாணா மோஹநம்
நாட்டை கமாஸ் காபி
நாரா யணிபரஸ் கௌரிம நோஹரி
நவரோஸ் நாயகி தேஷ்
ப்யாகடை தோடிதந் யாஸி ஸரஸ்வதி
ப்யாக் திலங் காம்போதி
ப்ருந்தா வநஸா ரங்கா கரஹர
ப்ரியைஹம் ஸாநந்தி
ஆகப் பலவகை பாடித் தாளமொ
டாடுக அம்மனையே
அம்பா புரிஎழில் ரம்பா வயிணவி!
ஆடுக அம்மனையே. (9)

80. ஜேய்வே தாந்ந விஹாரிணி பாரதி
ஜேஸ்ரீ மாலக்ஷ்மீ
ஜேஶிவ ஶங்கரி கௌரி பயங்கரி
ஜேலலி தாம்பிகையே
ஜேய்வே தாம்பரி கநபீ தாம்பரி
ஜேஶா கம்பரியே
ஜெயஆ ஶாம்பரி ஜெயபா ஶாங்குசை
ஜெயதுர்க் காம்பிகையே
ஜேய்வே தாநதி க்ருஷ்ணா நதிஜெய
ஸிந்தூ ராநதியே
ஜேய்யா மளமுகி பிங்கல முகிஜெய
ஜெயவென மந்த்ரிணிமா
ஹாய்வேய் வரிமுத லோர்புகழ் கோஷமொ
டாடுதி அம்மனையே
அம்பா புரஜக தம்பா வயிணவி!
ஆடுதி அம்மனையே. (10)

(அம்மானைப் பருவம் முற்றும்)

# IX. நீராடற் பருவம்

**(14 சீர் விருத்தம்)**

81. வர்ணபஞ் சக்கிளிகள் ருத்ரசம கஞ்சொல்லி
வாயார வாழ்த்தி மகிழ
மங்கைஊர் வஸிரம்பை ரதிமேந காதிய
மடந்தையர் ஒவொருவ ருந்தாம்
ஸொர்ணபாத் ரம்ரஜத நவரத்ந பாத்ரஞ்
சுமந்துகுங் குமம் அரித்ரா
சூர்ணமே னித்தேய்ப்பு வாஸனைத் த்ரவ்யரக
சூர்ணாதி ஏந்தி நிற்பக்
கர்ணரஞ் ஜகமாக வர்த்தமா நம்தேச
காலங்க ளுக்கேற் பவே
காநஸங் கீதஇசை குயில்பாட மயிலாடு
காட்சிகண் டேக ளித்துப்
பர்ணசா லைத்தவர்கள் நீராட வருமுன்பு
பாலிநீ ராடி அருளே
பல்குவள முல்லைவந மல்குசிவ வைஷ்ணவீ!
பாலிநீ ராடி அருளே. (1)

82. 'யை'யென்று 'சை'யென்று கண்டவர்கள் கேட்டவர்கள்
யாவரும் இகழ்ந்த போதும்
ஏதுமொரு சிறிதும்அத னைப்பொருள்செயாது நிலை
யிற்றிரிகி லார்நி லைத்து
மெய்யென்று மெய்யான உள்ளன்பர் கண்டுகொள
வேடநா டகமும் இன்றி
வீழ்ந்துமுடி தாழ்ந்தாடி நசையோடும் இசைபாடி
விளையாடி மெய்ம்ம றந்து
கையொன்று மெய்யொன்று நாக்கொன்று மூக்கொன்று
கண்ணொன்று காதொன்று நீள்
காலொன்று வாயொன்று மேலொன்றுள் வேறாக்
கருத்தொன்று மாறின்றி வெண்
ணெய்யென்று நெக்குநெக் குருகுமடி யார்கள்கண்
ணீராடி நீயருள்க வே

நெல்வயல்கொள் முல்லைவந நல்வயிண வீ!அவர்கண்
நீராடி நீயருள்க வே. (2)

83. நதியுட் சிறந்தகங் காபகீ ரதிஅலக
நந்தைமந் தாகிநி நதி
நருமதைகி ருட்டிணா வையைஅம ராவதி
நணாவிற் பவாநி ஸிந்து
கதியிற் கடற்கொத்த காவேரி சித்திரா
காஞ்சிமணி முத்தாறு நின்
காஞ்சித் தலக்கம்பை பம்பைதா மிரவருணி
காளிந்தி யாமி யமுனை
குதியுற்ற தென்பெண்ணை தப்திஸா ரச்சுவதி
கோதா வரிக்கவு தமை
குலவருணை அஸிபஞ்ச நதமொர்சந் திரபாகை
கொள்ளிடம் நுகாஸரயு பால்
நதியொத்த வேறுமுள ஆறுபல வற்றுள்வரு
நன்னீரு மாடி அருளே
நல்லவட முல்லைநகர் வில்வவந வைஷ்ணவீ!
நதிநனீ ராடி அருளே. (3)

84. மகரமீன் சேல்கயல் சுறாதிமிங் கிலமுதலை
வாளைகள் வரால்கெண்டை மீன்
வகைவகைய சங்கிப்பி சிப்பிநண் டாிநத்தை
மண்டலை களிற்குதி கொளும்
ஸகரஸா கரமுநீர்க் கன்னியா குமரிமுனை
சார்இந்து மாஸ முத்ரம்
சங்கவங் கக்கடலொ டரபிக் கடற்றிரய
ஸங்கமம் பார தத்தில்
முகரநதி பதிஸங்க மத்தாந முற்றுமதில்
முக்கியம தான ஸேது
முதுநுக் கோடிவே தாரணிய முந்நீர்கள்
மூழ்குகோ டிக்கரை முநீர்
மிகரஸித் தாடுவை யெனக்கொண்டு வந்துள்ள
வெள்ளநீ ராடி அருளே
வில்வவநம் என்னும்வட முல்லைவந வைஷ்ணவீ!
வெள்ளநீ ராடி அருளே. (4)

85. கடலேழு மாடியருள் நதியாவு மாடியருள்
கார்மாரி யாம்வேற்று நீர்
கலவைகொளும் ஆற்றுநீர் ஊற்றுநீ ராடியருள்
காதலா லுட்கசிந் தே

உடலூடும் ஓடிவர அழுதுதொழு துருகிமுன்
உகுத்திடுமெ யன்பர்கள் கணீர்
ஓடையா மஞ்சனந னீரருவி யாடியருள்
உள்ளந்த ரங்க யோகர்

இடமேவும் ஆதார நாடிபிங் கலைசுழுநை
இடகலையென் மூன்றும் ஒன்றா
எய்துதிரி வேணிஸங் கமமாடி அருளுடன்
எழிற்ப்ரயா கைத்ரி வேணித்

தடநீரில் ஆடல்போல் என்னன்பின் இன்பமாம்
ஜலதிநீ ராடி அருளே
சண்பகா ரணியம்அதில் நண்புசால் வைஷ்ணவீ!
சாந்திநீ ராடி அருளே. (5)

86. ஏழ்புவியில் ஏற்றமாப் பேசப் பெறுந்தீர்த்தம்
எட்டெட்டொ டிருகோ டிகள்
இத்தனையும் இன்னுமுள புண்யதீர்த் தங்கள்பிற
எத்தனையும் அத்தனையும் நீர்

சூழ்புவந மிற்பனிரு வருடங்க ளுக்கொர்முறை
தொகுகும்ப மேளா விலும்
சொல்கும்ப கோணமில் மஹாமக தடத்துஞ்
சுரந்துழி கரந்து வரும்ஏழ்

ஏழ்புலவர் ஆய்தமிழ்ப் பன்னீரில் மூழ்குநீ
இந்நீரி லும்மூழ்கு வான்
ஈண்டுபல அண்டாக்கள் வேண்டியாம் நிறைவித்
தெடுத்துவைத் துள்ளனமி நாள்

வாழ்புநித வதிஉனது திருமஞ்ச னத்திந்த
மஹிமைநீ ராடி யருளே
வடமுலைநல் வாயில்வாழ் தடமுலைமின் வைஷ்ணவீ!
மஹிமைநீ ராடியருளே. (6)

87. ஈகார மாம்துரீ யாக்ஷர ஸொரூபிணீ
ஈரெட் டெழுத்துந் மநீ
எட்டேழு மாம்பஞ்ச தஶிமந்த்ர ரூபிணீ
ஏழேழு சேர்ஈ ரெழுத்
தாகார மாவுடைய மாத்ருகா வர்ண அரு
ளாநந்த மான வடிவே
அகரமுத லாக்ஷகர மீறாச்சொல் ஐம்பத்தொர்
அக்ஷரநன் மாலை யணிவோய்
ஸாகார மேதனிநி ராகார மேபரம
ஸச்சிதா நந்த ஶிவமே
சதுமறை மஹாவாக்ய தத்வார்த்த மே !விமல
ஸகலகே வலநிஷ் களத்
தோகார மேஸகள ஸகுணநிர்க் குணமயமென்
ஊற்றுநீ ராடி யருளே
உத்தரமென் மாலதி புரத்தமரும் வைஷ்ணவீ!
ஊற்றுநீ ராடி யருளே. (7)

88. லட்சுமி ஸரஸ்வதி இரண்டுபே ருஞ்செங்கை
லாகுதந் தெதிர்கொண்டு போய்
லட்சணம தாய்நின் னிருப்பிடஞ் சேர்ப்பிக்க
லத்தையொடு காத்துள் ளனர்
சட்சுவோ ராயிரவன் மனைவிஇந்த் ராணியாம்
சசிதேவி நிற்கெ னக்கைத்
தட்டொளியு டன்குழற் கோதியு மலங்கார
ஸர்வாப ரணமும் ஏந்த
இட்சுவின் சாறுதேன் பால்அமுத மாதிபல
இனியபா னங்கள்கொடு வந்
திச்சையிற் கச்சுளுடை பச்சையிற் பட்டாடை
இரதிதாங் கிக்காத் துளாள்
கட்சுரும் பாள்வைஷ்ண வீ!கோயில் வாயிலிற்
கங்கைநீர் ஆடி யருளே
கடிதின் அம் பாபுரியில் நெடிதுறு கிணற்றூறு
கங்கைநீர் ஆடி யருளே. (8)

## (12 சீர் விருத்தம்)

89. ஹ்ரீம்பர மந்த்ர ஜபப்ரிய ஶாம்பவி
ஹ்ரீங்கா ராங்கனையே
ஹ்ரீம்ஶிவ ஶங்கரி ஹ்ரீம்ஶுப மங்கலை
ஹ்ரீங்கா ராம்பிகையே
ஹ்ரீம்பர தேவதை ஹ்ரீம்புர ஸுந்தரி
ஹ்ரீங்கா ராத்ரிஜையே
ஹ்ரீம்கம லேந்திரை ஹ்ரீம்மணி தீபிகை
ஹ்ரீங்கா ராலயையே
ஹ்ரீம்பர மேஶ்வரி ஹ்ரீம்ஸுர ஸேவிதை
ஹ்ரீங்கா ரோஜ்வலையே
ஹ்ரீம்கரு ணாகரி ஹ்ரீம்ஶஶி ஶேகரி
ஹ்ரீங்கா ரேக்ஷணியே
தேம்பர வுங்கே ணிச்சிவ கங்கைத்
தெளிநீ ராடுகவே
திருமுலை வநவயி ணவியே! கங்கைத்
தெளிநீ ராடுகவே. (9)

90. ஹரித்ரா சூர்ணப் பூச்சு நனைந்திழி
ஹரித்ரா நதியோட
ஹரித்ரா குங்கும மார்பில் நனைந்திழி
ஹரிச்சே யாறோட
உரித்தா கியகல வைச்சாந் தங்கரைந்
தொலிகங் கையி னோட
உயர்கத் தூரி கரைந்தெமு நாநதி
ஒத்தோ டக்கடி பூ
விரித்தா லென்ன விளைந்து ஸரஸ்வதி
வியனதி போலோட
வேணித் த்ரயஸங் கமமதில் மூழ்கும்
வியப்புக் களிமூழ்கித்
தரித்தாள் சேலையென் நதிநீள் பாலித்
தண்புன லாடுகவே
தடமுலை வடவந வயிணவி பாலித்
தண்புன லாடுகவே. (10)

(நீராடற் பருவம் முற்றும்)

# X. பொன்னூசற் பருவம்

**(14 சீர் விருத்தம்)**

91. ஸரஸ்வதி இலட்சுமி உருத்திரி மஹேஶ்வரி
ஸதாஶிவையென் ஐந்துருவ மும்
தன்னுள் ளடக்கமென முன்னுள்ள பின்னுள்ள
தற்போதி னுளஸகல ரும்
பரஸ்பரம் உணர்ந்துருக அன்னவர்கள் ஐவர்தம்
பதிமார்கள் ஐம்பிரமர் கள்
பதுமன்மால் ருத்திரன்ம ஹேஶன்ஸ தாஶிவ
பரம்பரனென் ஐவர் இவருள்
புரஸ்பரிஶ மேவுபொன் னூசலிற் பலகையாப்
போற்றுமைந் தாமவனை யும்
பூட்டுவெண் பொன்மணிச் சங்கிலிகள் நான்காப்
புகன்றபிற நால்வோ ரையும்
கரஸ்பரிஶ மாற்செய்து காமேஶி லலிதையாக்
கவினூச லாடி யருளே
கல்வமலர் பொய்கைநிறை வில்வவந வைஷ்ணவீ!
கவினூச லாடி யருளே. (1)

92. கமலமல் லிகைமுல்லை செவ்வந்தி ஸுரபுன்னை
கநகாம் பரங்கோங்கு செங்
காந்தள்கர வீரமரு தோன்றிஸூ ரியகாந்தி
காயா கடம்பு கணிகாழ்
நிமலவெண் தும்பைகூ தாளங் குருக்கத்தி
நீல(ம்)நில ஸம்பங்கி வெண்
ணேரோட மகிழ்பிச்சி புச்சிரோ ஜாபட்டி
நெல்லிஸவு கந்திகம் விளா
விமலமாந் துளவிதழி பாதிரி கரந்தையார்
விஷ்ணுக் கிராந்தி கிளுவை
வெட்சிஇரு வாட்சிகுவம் வெட்டிவேர் தாழைகூ
விளமரு மநோரஞ் ஜிதம்
அமலமாம் பூகுரவ ஶோகுசண் பகமிவைபெய்
அலரூச லாடி யருளே

அம்பா புரிக்கண்மலர் வம்பாசை வைஷ்ணவீ!
அலரூச லாடி யருளே. (2)

93. ஹரியொருபு றத்திருந் தாட்டவுடன் ஆசையா
ஹரனொரு புறத்தாட்ட வும்
ஹஸ்திமுகன் ஓர்துதிக் கையாற் பிடித்தாட்ட
ஹஸ்தமோர் ஈரா றினாற்
பரிவொடறு முகனாட்ட நாட்டமுடன் எண்டிசைப்
பாலகரும் ஆட்ட மற்றைப்
பண்ணவர்கள் போட்டியிட் டுக்கொண்டு தத்தமது
பதவிநீ டிக்க ஆட்டக்
கரியகுழல் இகுளைமார் கமலிநி அநிந்திதை
கலந்தாட்ட எண்திரு மகள்
கலைவாணி நவஶக்தி ஸப்தமா தாக்கள்தம்
கைத்தலந் தொட்டாட் டிடப்
புரியவும வர்க்கதுன்வி ருப்பிலசை தருமெனப்
பொன்னூச லாடி யருளே
புகழ்முல்லை வடவாயில் திகழ்வல்லி வைஷ்ணவீ!
பொன்னூச லாடி யருளே. (3)

94. லட்சோப லக்ஷமெனும் அக்ஷரோணி ஸேனையுடை
ராக்ஷஸ கணங்கள் அழவும்
ராஜமார்த் தாண்டகம் பீரதே வேந்த்ஸூர
ராஜன்அம ரோர் மகிழவும்
பிட்சோப வாஸஸந் தோஷஸங் கீதப்
ப்ரபுத்வப் புராரி தொழவும்
பேதமொட பேதங் கடந்தெணா றாயிரவர்
பெருமுநிவர் தாளில் விழவும்
ரட்சோப காரியென அறுபத்து நாற்கோடி
ரஹயோகி நியர்பு கழவும்
ரம்பைமே நகைதிலோத் தமையுருப் பசித(ம்) நவ
ரஸநடந முடனி கழவும்
உட்சோப நத்தொடு புறச்சோப நந்திகழ
ஊசலா டிக்கோ டியே
உத்தரத் தகளங்க ரத்நபுரி வைஷ்ணவீ!
ஊசலா டிக்கோ டியே. (4)

95. ஹ்ரீம்பாடி டாமையால் அங்குமிங் குஞ்சென்று
ஹ்ருதயகம லத்தைக்ய மாம்
ஹ்ரஸ்வதீர்க் காக்ஷரஅ நாஹதாப் ஜாதிஶய
ஹ்ராமாதி மந்த்ரங் களைத்

தாம்பாடி உய்யவொரு சற்றுநினை யாமையால்
ஸஞ்சலப் பட்டெங் கணும்
தனிவநத் தரசனென ஓட்டமும் பிடியுமாய்த்
தானே திரிந்த லைந்து

பாம்பாடி ஓடிவிளை யாடியுள டங்கியப்
பாம்பாட்டி மட்பானை யுட்
பணிவொடு பதுங்கிக் கிடத்தல்போற் கிடவாது
பாய்ந்துழல் குரங்கா நநம்

ஓம்பாடி யாமமதை யுட்கண்டு குதிகொளுமென்
உளஊச லாடி யருளே
உம்பர்புகழ் சம்பையிடை அம்பைபுர வைஷ்ணவி! என்
உளஊச லாடி யருளே. (5)

96. ஸச்சிதா நந்தபர மாணுவாய்த் தாணுவாய்ச்
சலநமில் லாஅசல மாய்
ஸத்வரா ஜததா மதங்கடந் தத்வைத
ஸாக்ஷியாய் ஒளிர்பர ஶிவம்

நச்சியா நந்தமது தான்துய்க்க வேண்டிமிது
நப்பட் டசைந்து ஶக்தி
நாமமும் பூண்டுமா யாஸஹித பிரமமாய்
நாமரூ பாதி யுட்பட்

டிச்சியா உலகத்தை யெல்லாம் படைத்திரட்
சித்தழித் துக்க ரந்தே
இன்னருள்செய் ஐந்தொழில் புரிந்திடற் காதிபரை
இச்சைகிரி யாஞாநமைந்

துச்சியாய் நீஅசைத லேமூலம் என்றுணர்த்
தொளியூச லாடி யருளே
ஒப்பில்வட முலைவாயில் வைப்பிணையில் வைஷ்ணவீ!
ஒளியூச லாடி யருளே. (6)

97. கட்டிப்பொ னாற்செய்த கெட்டிபடு பலகையிற்
கமலநிதி ஶங்கநிதி ஈர்
கண்போல் இழைத்துவஜ் ராங்குஶத் துருமணிக்
கற்களால் ரேகை யிட்டுச்

சுட்டிப் பதக்கமென மிளிருமா நால்வகைய
ஜோதிமணி நால்வளைய மும்
தூங்குசங் கிலிகள்பிறி தொருநால் இரத்நம்
தொடுத்துவெள் ளிக்கொக் கிகள்

கட்டித் தொகுத்தாட்ட விட்டமோ ஒன்பதாங்
கல்லான மாணிக்க மாற்
கற்போல் நிறீஇத்தரை கழற்றொடா மையில்ரத்ந
கம்பளம் விரித்து வைத்துப்

பொட்டிட் டரம்பையர்கள் நின்றாட்ட வாய்த்ததொரு
பொன்னூச லாடி யருளே
பொற்குமரி முல்லைவநம் நிற்குமொரு வைஷ்ணவீ!
பொன்னூச லாடி யருளே. (7)

98. லகுவான வானத்தை உத்தரமென் விட்டமா
லக்ஷணம தாக்கொண் டிரு
ளரிதரவி சந்த்ரரைக் கொக்கியா மாட்டிஉடு
லாலநவி ளக்கெரிப் ப

வெகுவான கநமொடுயர் நான்குவெற் புகளைநால்
வீசியா டுங்கயிற தா
மேவுவித் தாதார பூமியைப் பலகையா
மிளிரவைத் தொருபாத லம்

புகுவான யந்துவளர் பாதமலர் தொட்டுப்
புதைந்தாட்டு பூதலம் போற்
புணர்வித்து நெடுவிராட் புருஷவடி வாய்ச்சித்த
புருஷர்விளை யாடலைப் போல்

தகுவான வர்க்கெதிர்சொல் தானவர் நடுங்கஅத்
தனியூச லாடி யருளே
தமிழ்பரவு முல்லைநகர் அமிழ்தமன வைஷ்ணவீ!
தனியூச லாடி யருளே. (8)

99. ஹ்ரீம்பீஜ மந்த்ரத்தின் உட்பொருளை எப்போதும்
ஹ்ருத்புண்ட ரீகத் தெணி
ஹ்ரீங்கார வேதவொலி ரீங்கார(ம்)மநவண்டு
ஹ்ருதயபூர் வகமாய்ப் பணி
ஓம்பீஜ ஐம்பீஜ க்லீம்பீஜ ஸௌம்பீஜ
உத்தமோத் தமமந்தி ரம்
உள்ளும் புறம்பிலுமு ரோமத் துவாரமுழு
துஞ்ஜெபிக் குந்தவசி யர்
தாம்பீஜ நுண்ணியதுள் ஆல்பெரிது முற்றும்
தழைத்திலகு தத்துவம் போல்
ஸர்வாண்ட பிண்டஞ் சராசரமு மா(ம்) மஹத்
தத்வஆல் அணுவொர்குடி லை
ஆம்பீஜ அக்ஷரத் துள்ளடங் குவதுணர
அருளூசல் ஆடி யருளே
அல்லூர வநமில்அரி நல்லூர்தி வைஷ்ணவீ!
அருளூசல் ஆடி யருளே. (9)

100. ஸ்ரீம்வசந முடிவமை மஹாஷோட ஶீமந்த்ர
திவ்யஸ்வ ரூப லலிதை
ஸ்ரீவித்யை ரஹஸியம ஹாவித்யை யானமா
தேவிகா மேஶ்வரியென் நீ
ஓம்வசந முதலாக்கொள் நால்வேத வல்லுநரும்
ஒத்துமறை நான்கும் ஓத
உள்ளமுரு கித்தமிழில் வல்லவர்கள் பக்தியுடன்
உரியதுதி நூல்கள் பாடத்
தேம்வசந மடமாதர் கோலாட்டம் எச்சரிகை
தேன்பாங்கு நன்கா வடிச்
சிந்துகுற வஞ்சிகுயில் விடுதூது மடல்கும்மி
தீங்கிளிக் கண்ணி ஓடம்
பூம்வசந வாலிகனி ஊஞ்சல் ஆரதிசொலப்
பொன்னூச லாடி யருளே
பொழில்திகழு முல்லைவநம் எழிலொழுகு வைஷ்ணவீ!
பொன்னூச லாடி யருளே. (10)

(பொன்னூசற் பருவம் முற்றும்)

# நூற்பயன்

**(14 சீர் விருத்தம்)**

101. படர்வள்ளி வள்ளிமலை வள்ளலார் குறவள்ளி
பாதஇரு தயர்முரு கனைப்
பாடுந் திருப்புகழ் பரப்புதற் கென்றுதய
பாஸ்கரன் எனாவந் தவர்
அடர்வெள்ளை யுளஅருண கிரிதிருப் புகழ்சொலடி
யார்திருவ டிச்சென்னி யார்
ஆநந்த மயஸச்சி தாநந்த முநிவரர்தம்
ஆத்மார்த்த இஷ்ட தெய்வம்
தொடர்வுள்ள இதயத் துபாஸனா மூர்த்திஅதி
ஸூக்ஷ்மதத் துவவள்ளி யாம்
சுபபொங்கி யம்மை ஆவாஹநத் தாபநம்
தொட்டுச்செய் வைஷ்ணவி எனும்
இடர்விள்ளு வடமுல்லை வாயிலம் பாபுரி
இருக்குமுமை பிள்ளைத் தமிழ்
யாண்டுமா மந்த்ரமயம் ஆதலால் நூற்பயன்
இயம்பிஅறி கின்ற தன்றே.

(ஸ்ரீ வைஷ்ணவி பிள்ளைத் தமிழ்—1 முற்றும்)

ஸ்ரீ ஶிவாநந்தாஶ்ரமம்,
ஶிவாநந்த நகர் அஞ்சல்
ரிஷிகேஶம், டெஹ்ரி, கர்வால் (U.P.)

31–7–1970.

**ஸ்வாமி ஸாதுராம்**



உ

# ஸ்ரீ வைஷ்ணவி பிள்ளைத் தமிழ்–2*

(அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் அருளியது)

102.

நாட்டை) காப்பு (கட்டளைக் கலித்துறை) (ரூபகம்

வள்ளைக் கொடிசூழ் வடமுல்லை வாயில்வாழ் வைஷ்ணவிமேற்
பிள்ளைத் தமிழ்ஒன்று பேசற் கருளைப் பெரிதுதவும்
புள்ளைப் பொறித்த கொடிவேள் துணைஎனப் போந்தருளும்
வெள்ளைப் படிக விநாயகர் தாள்அர விந்தங்களே.

103. **1. காப்புப் பருவம்**

ஷண்முகப்ரியா) (12 சீர்க் கழிநெடில் அடி ஆசிரிய விருத்தம்) (ஆதி

பெண்டாம் அரையாம் பெருமான்முன்
பிளிறும் களிறாய் உருக்கொளஓர்
பிடியாய்ச் சென்று பெருவயிற்றுப்
பிள்ளை தன்னைப் பெற்றெடுத்த

வண்டார் குழலாள் வநமுலையாள்
வள்ளி கணவன் மநமகிழும்
மாதா பொழில்சூழ் வடமுல்லை
வாயில் வாழும் வைஷ்ணவிமான்

கண்டார் மநத்தைக் கவரும்எழிற்
கருணைக் கடல்மைக் காளமுகில்
கமலப் பிரமா கறைக்களமுக்
கணன்மூ வருக்கும் மூத்தவள்செந்

தண்டா மரையாள் ஸரஸ்வதியாள்
சசியா வருக்கும் தலைவிஅவள்
தனக்கு மேல்ஓர் தலைமைஇலாள்
தானே தன்னைக் காக்கவே. (1)

*2–12–1959இல் வெளிவந்த வைஷ்ணவி ஸந்நிதி முறை தொகுதி 2இல் (பக்கம் 357 முதல் 363 வரை) அச்சாகி உள்ளது இது.

104. **2. செங்கீரைப் பருவம்**

கேதார கௌளம்) (ஷடி விருத்தம்) (ஆதி

மாணிக் கமணிக் க்ரீடம் போல வயங்கும் முழங்காற்சில்
மருவ நிலத்தில் வைத்திப் புவியை மண்செய் விளையாடல்
பேணிக் கலைக்கும் சிற்றில் போலப் பிறப்பித் திறப்பிக்கும்
பிரச மலர்நேர் இருகை களையும் பிறங்க நிலத்தூன்றி
வாணிக் கநகத் திருவுக் கிடம்கண் மலரா வைத்தமுக
மதிசற் றுநிமிர்த் திவடக்கு மு(ல்)லை வாயில் வைஷ்ணவியே!
ஆணிக் கநகக் குழைகள் ஆட ஆடாய்! செங்கீரை!
அழியா முக்தி அடியேன் பெறுமா(று) ஆடாய்! செங்கீரை! (2)

105. **3. தாலப் பருவம்**

நீலாம்பரி) (எண்சீர்க் கழிநெடில் அடி ஆசிரிய வ்ருத்தம்) (கண்டஏகம்

புலைவீ டுடலூடே புகுதா வகை அருளைப்
புரிவாய்! உயிர் எல்லாம் புவியில் துயின்றோய்வால்
நிலைவீ றுறச்செய்து நினைவால் துயில்எழுப்பி
நித்தம் விளையாடும் நியமம் தவறாளே!
வலைவீ சினமாறன் மனைவீ! மலைராஜன்
மதலாய்! வடமுல்லை வாயில் வைஷ்ணவியாம்
தலைவீ! தாலேலோ! தாலோ! தாலேலோ!
தாயே! தாலேலோ! தாலோ! தாலேலோ! (3)

106. **4. ஸப்பாணிப் பருவம்**

ஸஹானா) (10 சீர்க் கழிநெடில் அடி ஆசிரிய வ்ருத்தம்) (ரூபகம்

நாரணி என்றொரு நாமம் உடைப்பெ(ண்)ணின் நல்லாளே!
நத்து கரற்கும் அரற்கும் அயற்கும்ந ணல்லாளே!
காரணி நெஞ்சினர் வஞ்சகர் அஞ்சிடக் கைத்தாளம்
கார்இடி நேர்எனக் கொட்டி முழக்கி நகைத்தாளே!
வாரணி கொங்கையின் மங்கை எனப்பெறு மாண்பாளே!
மஞ்சளி கொஞ்சும் வடமுல்லை வாயிலிற் காண்பாளே!
தாரணி ஏழையும் பெற்றவள்! கொட்டுக ஸப்பாணி!
சந்திர ஸூரியத் தோட்டினள் கொட்டுக ஸப்பாணி! (4)

107. **5. முத்தப் பருவம்**

தந்யாஸி) (14 சீர்க் கழிநெடில் அடி ஆசிரிய வ்ருத்தம்) (ஆதி

முத்தர்க்கு முத்திதரு வித்தாகி மூலமாய்
முளையதாய் விளைவ தாகி
மோநஞா நாநந்த முதிர்கனியை உதிர்தரு
முழுக் கருணை யாம்தாரு வாய்ப்

பத்தர்க்கு நித்தம்அருள் பண்ணும் தயாபர
பரஞ்ஜோதி ஆன பரையே!
பார்புனல் நெருப்புவளி வெளிபருதி மதிஉயிர்ப்
பரிணாம ரூப உமையே!

பித்தர்க்கும் என்னனைய பேயர்க்கும் அணுகரிய
பெரிய வடமுல்லை வாயிற்
பிராட்டியாம் வைஷ்ணவீ! முத்தம்மை என்றுநிற்
பேரிட்(டு) அழைப்பர்; சக்தி

முத்தச் செழும்பதியில் நித்தப் பெருங்கர்த்தன்
முத்தம்இட முன் மகிழ்ந்து
முத்துக் குமாரனையும் முத்தமிடும் வாயினால்
முத்தம் கொடுத்தருள்க வே. (5)

108. **6. வருகைப் பருவம்**

மோஹநம்) (12 சீர்க் கழிநெடில் அடி ஆசிரிய வ்ருத்தம்) (ஆதி

இரவொடு பகலும் இல்லா இடமதே ஏவ ருக்கும்
இன்பொடு துன்பும் இல்லா இடம்என எளிதாக் காட்டிக்

கரவொடு கரவில் லாமை காட்டவோ பாதி ஆணாக்
கலந்துருக் கொண்டு நின்றாய்? கமலையில் கமலை ஆனாய்!

தரவொடு விருத்தம் வெண்பா தாழிசை சந்தம் என்னும்
தமிழ்க்கவி வகைகள் எல்லாம் ஸரஸ்வதி நின்வீ டன்றோ!

வரவொடு போக்கில் லாளே! வாழ்த்துமென் மநத்துள் வாராய்!
வடதிரு முல்லை வாயில் வைஷ்ணவீ! வாராய்! வாராய்! (6)

## 109. 7. அம்புலிப் பருவம்

ராகமாலிகை) (14 சீர்க் கழிநெடில் அடி ஆசிரிய விருத்தம்) (ஆதி

(மோஹநம், ஸிம்மேந்த்ர மத்யமம், ப்யாகடை, நாதநாமக்ரியை)

உனதுடுப் பன்னிமார் இவள்கழுத்(து) ஆரத்தில்
ஒளிமணிக ளாய் ஜொலிப் பர்
உன்னைமற்(று) ஒருபாம்பும் உண்ணாத வாவெருண்(டு)
ஒடச்செய் பைம்மயில் இவள்

நினதுபேர் ஸ்ஸிமதி இராமன்என் பார்இவள்
நிதம்ஸ்ஸி தொழப்பெறு மவள்
நின்மதியை நன்மதிசெய் திருமதி இராமன்உளம்
நீடுமகிழ் ஸோதரி இவள்

மனதுபற் றாதுநீ வாளா இருப்பையேல்
மறுபடியும் ஒருதக் கனை
வரவழைப் பாள்அரனும் அஞ்சல்தந் தாளாத
வண்ணமும் செய்வள் மதியாய்!

அனநடைச் சினஇடைக் கனஉடைப் பினல்முடியொ(டு)
அம்புலீ! ஆட வாவே!
அடர்கொல்லை வடமுல்லை வாயில்வாழ் வைஷ்ணவியொ(டு)
அம்புலீ! ஆட வாவே! (7)

## 110. 8. அம்மானைப் பருவம்

பைரவி) (12 சீர்க் கழிநெடில் அடி ஆசிரிய வ்ருத்தம்) (ஆதி

எந்தமால் ஆவதிங் கேதெல்லாம்
எம்மைஈன் றாய்உன செயல்என்றே
1 எம்மனோர் யாவரும் இசை பாட
2 ஈஸனார் நேசமொ டுடன் ஆடக்

கந்தமார் பூங்குழல் மலர்ஆடக்
கஞ்ஜ(ம்) நேர் கைவளை விளையாடக்
3 கம்மல்ஆர் வார்குழை களும்ஆடக்
4 காதின்மேல் மோதுவான் கயல்ஓட

மந்தமார் புன்னகை இதழ்கூட
வாயினால் முக்திசொல் எனநாட
5 மம்மர்நோய் மாளவை வடமுல்லை
6 வாயிலே கோயில்கொள் வைஷ்ணவியே!

அந்தமார் செந்தமிழ் அளிமிழற்ற
அன்னைமார் பக்கல்வெண் குடைநிழற்ற
7 அம்மனாய்! ஆடுக அம்மானை!
8 அன்பினால் ஆடுக அம்மானை! (8)

*மேற்கண்ட பாடலில் 1, 2, 3, 4, 5, 6, 7, 8 எண்கள் இட்ட அடிகளைச் சேர்க்க அமையும் சுரந்துறை பாடல் வருமாறு.*

எம்மனோர் யாவரும் இசைபாட
ஈசனார் நேசமொ டுடனாடக்
கம்மலார் வார்குழை களும்ஆடக்
காதின்மேல் மோதுவான் கயல்ஓட
மம்மர்நோய் மாளவை வடமுல்லை
வாயிலே கோயில்கொள் வைஷ்ணவியே
அம்மனாய்! ஆடுக அம்மானை!
அன்பினால் ஆடுக அம்மானை!

111. **9. நீராடற் பருவம்**

**(ரூபகம் தோடி)** **(14 சீர்க் கழிநெடில் அடி ஆசிரிய வ்ருத்தம்)**

காசி கங்கைகா வேரி ஸங்கமம் கந்நி யாகும ரிக்கடல்
காளிந் தீநதி நீள்ஸ ரஸ்வதி கௌத மாநதி நன்மதை

மாசில் தென்வட பெண்ணை பாலி பொருநை வையை மஹாநதி
வாநி கூடல் மஹாமகம் கதிர்காம மாணிக்கக் கங்கையொ(டு)

ஆசில் ஸிந்து பிரம்ம புத்திரி அன்றி யும்கும ரித்துறை
ஆதி நூபுர கங்கை ஸேது அனைத்தி னின்றும்நீர் ஈட்டினேன்

மூசி வண்டுகள் மொய்கு ழல்வட முல்லை வாயில் எம் வைஷ்ணவீ
முக்தர்அன்பெனும் தீர்த்த மோடவை முற்றும் நீஇனி தாடவே.
(9)

112. **10. ஊசற் பருவம்**

ஆநந்த பைரவி) (12 சீர்க் கழிநெடில் அடி ஆசிய வ்ருத்தம்) (ஆதி

மீவான் ஊசலுக் குத்தரமா
விட்டக் கயிறுகள் வெற்பாக
விளங்கும் மேதினி கீழ்த் தட்டா
மிதிக்கும் பாதலம் அடிஇடமாத்

தூவான் மழைபனி நீர்துளிப்ப
ஸோமன் கதிரவன் உடுக்கணமும்
ஜோதிக் கனலியும் சுடர்விளக்கத்
தொடர் கால் சாமரம் இரட்டவிரைப்

பூவாழ் கலைமக ளும்திருவும்
போகிக் குடையவ ளும்புகழப்
புண்டரி கத்தவன் முதல்அமரோர்
பூவே தியர்மலர் மழைபொழிய

மாவாழ்(வு) அருள்செயும் வடமுல்லை
வாயில் வாழ்தரு வைஷ்ணவியே!
மடையேன் மநம்எனும் ஊசல்இற
மயிலே! ஆடுக! பொன்னூசல். (10)

113. **வாழி**

சங்கராபரணம்) (கட்டளைக் கலித்துறை) (ரூபகம்

வாழியோ முல்லை வடவாயில் என்கின்ற மாதலம்தான்
வாழியோ அத்தலத் தீஸ்வராம் மாசில் மணி இறைவர்
வாழியோ மற்றும் கொடிஇடை நாயகி வைஷ்ணவி மான்
வாழியோ அன்னவர் மைந்தரும் அன்பரும் வாழியவே.

(வைஷ்ணவி பிள்ளைத் தமிழ்–2 முற்றும்)



# பெண்பாற் பிள்ளைத் தமிழ் நூல்கள்—68

(பெயர்களுடன் 'பிள்ளைத் தமிழ்' என்ற தொடரைக் கூட்டிப் படிக்கவும்)

1. அகிலாண்ட நாயகி (திரு ஆனைக்கா)
2. அங்கயற்கண் அம்மை (திரு ஆனைக்கா)
3. அபயாம்பிகை (மாயூரம்)
4. அபிராமி (கடவூர் ?) – திருவனந்தபுரம் ஏட்டுச் சுவடி நிலையம்
5. அமுதாம்பிகை (குளத்தூர்)
6. அலர்மேல் மங்கை (அரியக்குடி)
7. அழகிய மாமுலை அம்மன் (திருவீழிமிழலை)
   – டாக்டர் உ.வே.சா. நூல் நிலையம்
8. அறம் வளர்த்த அம்பிகை (குலசேகர பட்டினம்)
9. ஆண்டாள் (ஸ்ரீ வில்லிபுத்தூர்)
10. ஆயிஷா நாயகி (கவிஞர் கா.மு. ஷெரீப்)
11. இளமுலை அம்மன் (திரு ஒத்தூர்)
12. உண்ணாமுலை அம்மை (திருஅண்ணாமலை)
13. உமை அம்மை (அளகை)
14. உமையாம்பிகை (வித்வான் த்யாகராஜ செட்டியார்)
15. உலகம்மை (பாபநாசம்) – டாக்டர் உ.வே.சா. நூல் நிலையம்
16. கமலாம்பிகை (கமலை)
17. கமலாலய அம்மன் (திரு ஆரூர்)
18. கலைமகள் (புதூர் வேங்கடஸாமி ரெட்டியார்)
19. காந்திமதி அம்மை (உறையூர்)
20. காந்திமதி அம்மை (நெல்லை)
21. காமாக்ஷி அம்மன் (கச்சி)
22. காமாக்ஷி அம்மன் (தேவி கருமாரி தாஸர்)
23. காமாக்ஷி அம்மை (காஞ்சி – சிவக்கொழுந்து)
24. கொடி இடை நாயகி (வட திருமுல்லை வாயில்)
25. கோமதி அம்பிகை (சங்கர நயினார் கோயில்)
26. சிவகாமி (கோயில்)
27. சிவகாமி (திருப்புத்தூர்)
28. சிவகாமி அம்மை (சிதம்பரம்)
29. சிவகாமி அம்மை (தில்லை)
30. சிவகாமி அம்மை (தில்லை) – சொக்கலிங்கம் செட்டியார்
31. சௌடாம்பிகை (அறுப்புக் கோட்டை)
32. தவம் பெற்ற நாயகி
33. துணைமாலை அம்மை (திருச்சுழியல்)
34. த்ரிபுரஸுந்தரி

35. நீலாயதாக்ஷி (நாகை)
36. பச்சை நாயகி
37. பச்சை நாயகி (பேரூர்)
38. பர்வத வர்த்தநி (தேவை)
39. பாகம் பிரியாள் (கண்ணபுரம்)
40. பாகம் பிரியாள் (தூத்துக்குடி)
41. பாத்திமா நாயகி (மீரான் ஸாஹிப்)
42. புவநேச்வரி (புதுக்கோட்டை)
43. பெரிய நாயகி (திரு அதிகை)
44. பெரிய நாயகி (திருக் கோகர்ணம்)
45. பெரிய நாயகி (திருவெண்காடு)
46. பெரிய நாயகி (வ்ருத்தாசலம்) – சொக்கலிங்க சிவப்ரகாசர்
47. பெருந்திருப்பிராட்டி (திருத்தவத்துறை)
48. ப்ரஹ்ம வித்யா நாயகி (திருவெண்காடு)
49. மங்களாம்பிகை (குடந்தை)
50. மங்களாம்பிகை (ஸ்ரீ வாஞ்சியம்)
51. மங்களேச்வரி (உத்தரகோச மங்கை)
52. மயில் அம்மை
53. மாரியம்மன் (நாரதர் மலை)
54. மீநாம்பிகை (சிவபுரம்)
55. மீநாக்ஷி அம்மை (மதுரை)
56. முத்துக்குமரி (செங்கை பொதுவன்)
57. யௌவநாம்பிகை (சிதம்பரம் – இளமை ஆக்கினார் கோயில்)
58. வடிவுடை அம்மன் (திரு ஒற்றியூர்)
59. வடிவுடை அம்மை (ஆதிபுரி)
60. வள்ளிநாயகி
61. வெண்ணீற்றுமை (நல்லூர்ப் பெருமணம்)
62. வேத நாயகி (திருநணா – பவாநி)
63. வேத நாயகி அம்மன் (கழிப்பாலை அல்லது சிற்றேமம்)
64. வைஷ்ணவி (பிள்ளைக் கவி – வட திருமுல்லை வாயில்)
65. வைஷ்ணவி (வட திருமுல்லை வாயில் – அம்பாபுரி)
66. ஸேது பர்வத வர்த்தநி (ராமேச்வரம்)
67. ஸொர்ணபுரி அம்பிகை
68. ஸௌந்தர்ய நாயகி (கருவூர் ஆநிலை)

[ஷை பட்டியலை உதவிய, பாலகவி **ஸ்ரீ முத்து. கோ. ராமன்** (உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை–600 113.) அவர்கட்கு எங்கள் பெரு நன்றி.]

– பதிப்பாளர்

